உ

குருவேதுணை.

பொதுநூல் - சிறப்புநூல்,

திருவெண்பா - விற்பனம்,

என்னும்,

# நான்குநூல்.

## அருளாட்சி.

இவை,

முருகதாசசுவாமிகளென்றும்,

திருப்புகழ்ச்சுவாமிகளென்றும்,

விளங்குகின்ற

**தண்டபாணிசுவாமிகள்**

திருவாய்மலர்ந்தருளியது.

ம-ள-ள-ஸ்ரீ, கொடிப்பள்ளம்

முனியப்பசெட்டியாரவர்கள் குமாரர்,

ஏழுமலைசெட்டியாரவர்களால்,

ஊ - புஷ்பரதசெட்டியாரவர்களது

கலாரத்நாகரம் என்னும்

அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

ரிஜிஸ்த்தர்—ஈஸ்வர ௵ மாசி௴.



உ

குருவே துணை.

# பொதுப்பாயிரம்.



## நேரிசை வெண்பாக்கள்.

### தெய்வக்காப்பு.

எத்தெய்வமெவ்வுயிர்க்கு மின்னுயிராமியாவருஞ்
சொல், பொய்த்தெய்வமெய்த்தெய்வப் பொங்கமா-
மத்தெய்வ, மச்சமறுத்தாளவல்ல தாகமவேதங்கட்
ந்த, சொச்சமதேநந்தந் துணை. (க)

### உறுதிக்காரணம்.

வள்ளுவனார்நூலு மறையாகமப்பொதுச்சீர்
விள்ளுங்குரவன் வியன்றுளும்-தெள்ளுதமிழ்த்
தென்றற்கிரிப்புனலுந் தெய்வத்திருவருளு
மென்றற்குறுதி நல்குமே. (உ)

### நூற்பெயரும் புகழ்ச்சியும்.

பொதுநூல்சிறப்புநூல் போற்றுதிருவெண்பா
பதுமன்புகழ்விற்பனமென்--சதுவகைய
வாமன்மகளா ரரவிந்தப்பொய்கையறி
மாமன்மகளா ரீன்றவர். (௩)

அவையடக்கம்.

புவியிற்பிறந்தவுடன் பொங்குதமிழ்த்தீஞ்சொற்
கவிசெப்பினர்தருநூற் கண்டு-மவியாச்
செருக்கொடிவையான்பகர்தல் சேண்மாவிற்கொல்
காத், தருக்கொடுமெண்கேம் பாய்தல். (௪)

அரங்குமேற்றேரும்.

தில்லையரங்கிற்சிறியனேன்செப்பியவெண், சொல்
லைமகிழ்ந்தேற்றதுமெய்த்தொண்டர்குழாங்-குல்லை
மலர்த், தார்வேள்செயலுந் தவளமலராளருளுஞ்,
சேர்வேட்கையெய்தற் றெரிந்து. (௫)

இந்நூலாசிரியர்நாமங்களின் ஐயநிவிர்த்தி.

ஒன்றிரண்டுநான்கெனுநா லூருணர்ந்திலாப்பெயர்க
டொன்றிடலின்வேறுச்சொல வேண்டா-மன்றிமற்று
மன்னவைபோற்சிற்சிலவுண் டாயவற்றையுந்தமிழா
லின்னவைபோற் கண்டுகொண்மினே. (௬)

——∘∘⁂∘∘——





குருவே துணை.

# சிறப்புப்பாயிரம்.

## சாத்துகவிகள்.

இந்நூலாசிரியர்
தமது பிதாஸ்த்தானமாகக்கொண்டிருக்கிற
ஸ்ரீமத் சண்முகசுவாமிகள்
திருவாய்மலர்ந்தருளியது.

வள்ளுவனார்தம்மருகன் வள்ளிதருமாண்புதல்வன்
கொள்ளுமுறையாற்குறளைக் கூடியே-நள்ளுபுகழ்ப்
பாண்டியினிலேந்துநன்னூற் பாவையயைப்பெற்றத
னு, லாண்டியுரு வாய்த்திகழ்கின் றான்.

இந்நூலாசிரியர் தமதாத்மசமானஸ்த்தானமாகக்
கொண்டிருக்கிற ஸ்ரீமத் குமாரசுவாமிகள்
அருளிச்செய்தது.

வேய்கிளர்தோண்மெல்லியலார் மெய்ப்பருவமெய்
துங்காற், றுய்கிழவியாதல் சரதமா-லாய்குறட்பெ
ண், ணன்றதண்டபாணியைச்சேர்ந் தைந்துபெண்
பெற்றுளவர்க்கண், டியான்றழைக்கு மோகமெய்தி
னேன்.

மா-ா-ா-ஸ்ரீ வேம்பத்தூர்ப்
பிச்சுவைய ரவர்க ளியற்றியது.

சந்தக்கவிக்கே சரபநீயென்றிருந்தே
ளிந்தக்கவிக்குனையா னென்சொல்வேன்-சந்ததமு
மார்முருகார்செஞ்சடிலத் தண்ணலடியார்க்கருள
நேர்முருக தாசமன்ன னே.

ம-ா-ா-ஸ்ரீ, அஷ்டாவதானம்
பாலசுப்பிரமணியஐய ரவர்களியற்றியது.

பலகலைகளாங்கடலும் பனிக்கடலோடருட்கடலு
ம்பருகியப்பா, லிலகுதமிழ்க்கடன்மூன்றுமீந்தவகத்
தியனையிணையெனலாமன்றிக், கலகமிடுஞ்சிலபுலவர்
நடுநடுங்கக்கவிமாரி காட்டுமேன்மைப், புலவர்சிகா
மணிமுருகதாச னுக்கிங் கெவரையெதிர்புகலலாமே.

ம-ா-ா-ஸ்ரீ ஐயம்பேட்டை-நெல்லையப்பமுதலியா ரவர்கள்
குமாரர் சிவகுருநாதமூர்த்திக ளியற்றியது.

பாராரும்போற்றுந் திருப்புகழ்ச்சாமிப் பயோதரநற்
சீராருமுண்மைச் சமரசவானந்தத் தெண்கடலுண்
டேராருநீதிநன் னூறன்குமன்னவற் றின்பயனு
நீராருநல்லரு ளாட்சியும்பெய்தது நீங்கலன்றே.



உ

குருவேதுணை.

# நான்கு நூல்.

## முதலாவது பொதுநூல்.

காப்பு-நேரிசை வெண்பா.

எல்லாவுலகு முடையானை யெத்தொழிற்கும்
வல்லானையன்பர் மனத்தானை-நல்லார்
விருப்பொருங்கு நல்கியொளிர் மெய்யானைப்பேசுந்
திருப்பொதுநூற் சொல்லே திறம்.

### க-வது, கடவுள் வாழ்த்து.

மாதாவயிற்றகத்தும் வண்சுவையவூணளித்த
தாதாவொருவனே சற்குருவென்-றோதாத
பொய்ச்சமையத்தோரும் புகழும்பொதுக்கடவுண்
மெய்ச்சமையத் துள்ளவ னாமே. (க)

இத்தன்மையனென் றியம்பரியமெய்க்கடவு
ளெத்தன்மையுமுடையா னென்போரோ-பைத்தலைப்
பாம், பன்னசமய மளவிறந்த பல்கோடி
துன்னவைத்தா னென்பதுண்மைச் சொல். (உ)

உலகிற்சிலர்தயங்க வொன்றுடனென்றெவ்வா
தலகில்சமய மமைத்தோன்-கலகமறுத்
தொன்றாக்கியாள்வலியு முள்ளானென்றேதுவது
நன்றாற் சிறந்துடைய நா. (ந)

எங்குமிருக்கு மிறையொருவ னென்னார்தஞ்
செங்குருதியாறோடச் செற்றேனும்-பொங்குகடற்
பூமிநிறையப் புகழ்விளக்கும் புண்ணியர்க்கே
காமியமு ஞானக் கதி. (ச)

யாதொன்றுந்தானறியா தில்லாவிறையவனை
வாதொன்றும்பேதம் வகுத்தானைக்-காதொன்றக்
கேட்டுமடமிகுத்துக் கிழோரைக்கெஞ்சுநர்க்கு
வீட்டுநலந்தீதா குமே. (ரு)

எந்தப்புகழு மிறைதருவ தென்றுரைக்குஞ்
சொந்தப்புலவருள்ளிற் றேயுமவன்-கந்த
மலரிற்செறிவதென வானமுற்றுநின்ற
நிலயந் தெரிவதொன்றே நேர். (சா)

தன்னைப்புகழ்ந்திறைஞ்சுந் தன்மையோர்சாற்றன்
முற்று, முன்னைமொழியாக்கு முதல்வனன்றிப்-பின்
னையொன்றை, நன்றென்றுரையா நலத்தினோர்நற்புக
ழ்ச்சி, யென்றென் றொளிவிடுவ தே. (எ)

பொய்ச்சமையங்கோடி புவியிற்கிடந்தாலு
மெய்ச்சமையமொன்றன்றி வேறில்லை-யச்சமைய
மெத்தேவுமெங்கோனெனவுரைக்குமில்லையென்னுஞ்
சித்தேமெய்த் தெய்வமென்பதே. (அ)

வாயுடையவெல்லாம் வளர்காலமுள்ளமட்டு
மேயுடையவண்மை விரித்தாலுந்-தீயுடைய
செந்தேனனையபொதுத் தெய்வத்தின்சீர்முடியா
தெந்தே வதுவொன்று மே. (௯)

ஓர்சமையத்தேவா யொருவனு மெம்பெருமான்
பேர்சமைத்ததன்றிப் பிறருமாஞ்-சீர்சமைத்துப்
பேசியிகழ்வதற்கோ பேசுமொழிகற்பித்தா
ஞசிபகர்ந் துள்ளவென்றே யாம். (௰)



## உ-வது, கருவிணக்கடல்.

பரிதிமதியெழிலி பார்நீரழல்கால்
விரிககனம்வெற்றிவேல் வேந்தன்-றிரிவனவு
நிற்பனவுமாராய்ந்த நீள்கருணைச்சோதியொன்றே
தற்பரமாஞ் சத்தியந்தான் ரூன். (க)

வேந்தருக்குவேந்தனைய வேந்தன்விறற்கருணை
சாந்தமேயன்றித் தறுகணே-யாந்தகைமை
மெய்யடியார்தம்மளவு மேவாதுமேவிடினு
மையமில்லை யஞ்சா ரவர். (௨)

அணுவசைவுந் தன்னசைவே யாகநின்றசோதி
யெணுமியல்பை யாரறிவாரில்லைக்-கணுவுமிழுஞ்
செந்நென்முத்தஞ்சிந்துந் திரைநீர்வயலுலகோர்க்
கெந்நெறியு நன்றுரு மே. (௩)

சூனியமென்றோதறியாத் தொண்டருக்கித்தொல்
லுலகு, மேனிலமுஞ்சொந்தமென வெற்றிதருங் -
கோனிருக்கப், போற்றுமற்றம்முடைய புந்திபரமெ
ன்போர்க்குக், கூற்றுங்கருணைமிகுங்கோ. (௪)

பல்லூழிமெச்சிப் பகர்ந்தாலுந்தீரரிய
நல்லூழ்வடிவான நாயகனைச்-சொல்லூழென்
றோதமட்டும்வல்லா ருணராருயர்கருணைச்
சீதளத்தோர்காண்பார் தினம். (௫)

தன்னடியார்நெஞ்சந் தனைவிரும்புஞ்சத்தியத்தோ
னென்னடிமையென்று மியம்புமா-முன்னடிமற்
றாருமில்லையில்லை யவனையன்னவனுஞ்
சாருமறிவோருணாக்கின் றார். (௬)

கடவுளருட்பேறே கல்வியென்றசொற்கேட்
டுடல்குளிரநெஞ்சுமுருகத்-திடமுளைக்கு
மெய்யடியார்கூட்டமொன்றே மேலவர்கோன்றன்க
ருணைச், சையமிசையேறத் தரும். (எ)

கருணையில்லார்க்கில்லைக் கதியென்றசொற்கொண்
டிருணலியநாடி யிளைத்துத்-தருணியென
நெஞ்சுருக்கும்பாட னிகழ்த்தவல்லமெய்யடிய்யார்க்
கஞ்சுதொழிற் செய்வதரிதா. (அ)

எந்தநலத்தை யெடுத்துப்புகழ்ந்தாலு
மைந்தருணர்வில் வலியென்ற-சொந்த
நிலயந்தனைக்காட்டு நித்தியமாந்தெய்வ
மிலகுங் கருணைவடிவே. (கூ)

எல்லாநலமு மிருந்தாலுமின்கருணை
யில்லார்வலிசிறிது மில்லாரோ-கொல்லாமை
யொன்றுடையாரியாவு முடையாரொனவுளைக்கு
நன்றுடையார்தம்மடிமை நாம். (ώ)



## ௩-வது, நீதிநெறி.

மெய்க்கடவுடன்னைவிரும்புமொருவனுக்காப், பொ
ய்க்கடவுளன்பர்களைப் பொன்றுவித்துக்-கைக்கடவு,
ளொன்றேயுயர்வெனினு முள்ளதெனுங்கள்ளனென,
நின்றேயுலகா ணெறி. (க)

எங்கோனடாத்துநெறி யின்னதெனயாரறிவார்
தங்கோனொருவன் றனியனெனச்-செங்கோல்
செலுத்துந்திறலுடைய செல்வருணர்வா
ரலுத்திகழமாட்டா ரவர். (உ)

தீயரறியார்தெளிந்தோர்விருப்பமறார்
மாயமறுத்தோர் மருவுவார் - தூய
குணமனைத்துங்கொண்டதொரு கோமான்கொடியோ
ர், நிணமிருக்கக்கொல்லுநெறி. (௩)

செங்கோலும்வேலுந் திகழ்புயத்துத்தேர்வேந்து
மெங்கோன்கடவுளே யென்போனும்-வெங்கோலைக்
காயுங்கரமுங் கருத்துமுடையானெனக்கண்
டேயுந் துயரொழிப்பதே. (௪)

தெய்வநெறியினன்றித் திர்க்கரியசந்தேக
மெய்வதரிதறிமி னேழையீ-ருய்வ
தறியேனெனத்தளரு மாகுலமொன்றற்றுற்
பொறியேமதியாகிப் போம். (ரு)

நாயினுரிமைகொண்டு நற்குரங்கிற்பற்றுமன்பர்
மேயினலது வெருளாதார்-தாயிற்
றிகழுமொருவனுக்குத் தெய்வமுளதென்போர்
புகழுமிகழும் பொறை. (சு)

நற்கோவுதவிநலந்தீது காட்டுமவன்
றற்கோபமின்ன தகைத்தென்று-சிற்கோலங்
கண்டோரறிவதன்றிக் காசினியிற்காண்பவரார்
விண்டோய் நெறிகாட்டுமெய். (எ)

தானேயழிவரிய சத்தியமாநின்றதனிக்
கோனேயெமது குலதெய்வ-மானேறு
போலப்பொருந்திறலோர் புந்திகொண்டமெய்த்துற
வோர், சாலப்பெருகுந் தமர். (அ)

அன்னமுநீருமளித்துறங்கச் செய்தெழுப்பு
முன்னவனீதி முறைநோக்கின்-மன்னவனுள்
ளஞ்சுந்திறலு மடியார்மெய்யன்பதனாற்
கொஞ்சுதலுந்தோன்றுங் குணம். (கூ)

ஓங்குங்கடவு ளொருவனெனவுணர்ந்தோர்
தாங்குநெறியே தவமென்னிற்-றீங்குபுகல்
புன்சமையமத்தனையும் போக்கிப்பொதுவிளக்கும்
வன்சமையநன்னெறியோர் வாள். (௰)

---

## ௪-வது, சத்தியம்.

யாவருக்குங்கோவா மிறையொருவனன்றிமற்றோர்
சாவரெனக்கூறுகின்ற சத்தியம்போ-லீவதற்ற
மன்னருக்குத்தீங்கு வருமெனலுஞ்சத்தியமே
சின்னதல்ல மெய்ச்சத்தியம். (௧)

மெய்யறிந்தமெய்யருக்கே மெய்யனருண்மெய்யாம்
பொய்யழிந்தவெற்றிப் புகழுண்டாம்-வையமுடன்
வானுஞ்சமமாம் வழக்கறியுமாண்பெய்து
நானும்பொதுவென்னு நா. (௨)

செஞ்சேவலென்னச் செருப்புரியுந்தேர்வேந்தர்க்
கஞ்சேனென்றோது மறிவுடையார்-நெஞ்சேகன்
றன்பாலிருக்குமன்றித் தன்னுடம்பைத்தானென்று
வன்பாலழியா தம்மா. (௩)

கொல்லார்தங்குற்றங் குணமாகக்கொள்ளுமொரு
வல்லான்றனைமறந்தோர் மற்றவரைப்-பொல்லாரென்
றெண்ணிப்பரதவிப்பாரென்றுணர்ந்தீண்டெப்பொ
ழுது, நண்ணிப்பரதவித்தேனன். (௪)

இறைவன்றனைப்பணிவோர்க் கின்னலுநல்லின்பம்
பொறையுஞ்சவுரியமும் பொற்பூண்-கறைதவிர்ந்த
நெஞ்சேயினியதுணை நீணிலத்துச்சிவர்முற்றுந்
தஞ்சேயனையார்மெய் தான். (௫)

பொன்றுப்பொருளறிந்துபோற்றும்புனிதரதன்
கன்றுவனொன்னுங் கவிஞர்பாற்-சென்றார்க்கு
மெத்தொழிற்குந்தாரகம தென்றுணருமெய்மையுண்
டாம், பொய்த்தொழிலிற்சேரா பொறி. (௬)

சத்தியத்துக்கஞ்சுங் தவத்திற்சிறந்தோர்க்கே
நித்தியன்பாற்பேசு நினைவுண்டா-நத்தியவா
றெல்லாங்கிடைக்கு மெளிமைப்படவிளையும்
பொல்லாவினையனைத்தும் போம். (௭)

மெய்யாங்கடவுளன்றி மெய்யுளதென்றோதுமவர்
பொய்யாளரென்றுணர்ந்தும் பூதலத்தி-னையாம
னையுஞ்சிலர்புகழை நாட்டாமனைவுற்றுற்
செய்யுந்தொழிலே திரு. (௮)

எவ்வுயிருந்தன்னடிமையாகுமிறைவனுக்குத்,தெ
வ்வுயிர்கொன்றேங்குந் திறற்புதல்வ-னிவ்வுயிரொன்,
றெண்ணுமறிவுடையா னியாவனவனிச்சைபொய்த்
தான், மண்ணுலகமீடேறு மா. (கூ)

மெய்வெறுத்துமெய்மை விரும்புகின்றவித்தகர்க்குப்
பொய்வெறுக்கும்வாழ்வோர்புதுமையோ-மைவெ
றுக்கும், பஞ்சசந்தவிரப் பரனருளுந்தம்புகழு
மிஞ்சன்புகொள்வதொன்றே மேல். (ம)



# ரு-வது, சித்து.

எங்கெங்குநிற்கு மிறையவனையேதமில்சீர்ச்
சிங்கம்பொருவுஞ் சிலநல்லோர்-பங்கினின்று
சித்துவிளையாடுந் தெய்வத்தைச்சிந்தைசெய்வோ
ரத்துடையாராவார்க ளாம். (க)

உலகிற்குதவும்வலி யுள்ளாருதவா
திலகுமுடலோ டிருந்தா-லலகையினுந்
தீயரெனத்தேர்ந்துதினஞ் செப்புந்திறலளித்த
நாயகன்சித்தொன்றே நலம். (உ)

மேகம்புனல்சொரிய வெண்கதிருஞ் செஞ்சுடரு
மாகந்தனிலுலவ மாறுபடா-தேகவெளிச்
சித்தன்புரியுந் திருவிளையாட்டுன்னிமகிழ்
பத்தனுக்குமுண்டோ பயம். (௩)

சித்தேவடிவாத்திகழ்கின்ற தெய்வமொன்றே
யெத்தேவுமாமென் றிசைவுற்றும்-பொய்த்தேவு
மந்தந்தலோகத் தமர்கின்றதென்னார்தஞ்
சொந்தந்தானந்தச் சுடர். (௪)

சித்தைப்பழித்துத் திரிகின்றதீயோர்மற்
றெத்தைக்கருதி யிருப்பாரோ-தத்தைமொழித்
தாயகடுநீங்கித் தறையிற்சிசுவெனமுன்
மேயதுவுமத்தொழிலா மே. (௫)

அண்டபிண்டமாதி யனைத்துமுளவாகக்
கண்டனவுமுண்மைக் கடவுளார்-தொண்டருக்குச்
சித்தென்றுதோன்றுந் திருட்டுத்தவமுடையார்க்
கெத்தென்றுதோன்றுங் கொலே. (௬)

வங்கந்தனையிகழும் வாதிகளுமாதவத்துச்
சிங்கமெனச்சித்துமிகச் செய்யாமற்-பங்கமுறும்
பத்தர்களும்பொய்யரெனப் பாடுகின்றபாவலரைச்
சுத்தரெனச்சொல்வதுமெய்ச் சொல். (௭)

மெஞ்ஞானஞ்சித்து விரவியதென்றேதாோ
யஞ்ஞானத்தோரொன் றறிவுற்றேர்க்-கெஞ்ஞான்று
முள்ளானைப்போற்று முணர்வுடையமேலோருந்
தள்ளாப் பெருமைதகும். (அ)

மெய்ச்சித்துடையாரோ மேலோர்வெருட்சியருப்
பொய்ச்சித்துடையாரும்போன்றேரோ-யெச்சித்து
மெங்கோனருளிலையே யில்லையில்லையாவருக்குந்
தங்கோ னவனொருவன்றன். (௯)

எச்சமையத்தோர்க்கு மிலங்குமெழின்மங்கலநா
ணச்சமறுஞ்சித்தொன்றே யல்லாம-லச்சமையத்
தெய்வங்களெங்கோன் றிருவருளையன்றியில்லை
மெய்வசனங்கண்டு சொன்னேமே. (௰)

---

## ௬-வது, ஞானம்.

பத்திமுற்றிவைராகப் பண்பாமதுமுதிர்ந்தாற்
சித்திதருஞானத் தெளிவுண்டா-முத்தி
வடிவாம்பொதுக்கடவுள் வண்மையேகூறு
மடியாருக் கெய்துமது. (க)

ஞானமில்லாத நரரெல்லாம்புல்லருந்து
மானமில்லாத மரையொப்பா-ரேனைப்
பெரியோர்பொதுக்கடவுள்பெற்றமைந்தர்போல்வார்
கரியோதி லன்னவனேகாண். (௨)

பெற்றவர்போற்பெற்றிலரும் பெற்றேமெனப்பிறங்கி
யுற்றதொருஞான வொளிகண்டாள்-மற்றவருந்
தந்தமனென்றெண்ணுந் தகையுண்டாந்தாழ்வணுகா
தெந்தவுலகுந் தனதாமே. (௩)

மெய்யறிந்துபோற்ருத வீணருக்குஞானமில்லைப்
பொய்யணைந்தோர்நெஞ்சிற் பொறையில்லை-யையந்
தவிரார்க்குச்சித்தியில்லைத் தன்னைமறந்த
கவிராசர்க் கில்லைக்கலி. (௪)

தன்னுடலம்வீங்கத் தசையருந்துந்தன்மையர்பான்
மன்னுமெஞ்ஞான மருவாதே-யென்னுயிர்க்குச்
சேதம்வரினுமொன்றைச் செற்றருந்தேனென்றுரை
க்கு, மாதவர்பாற் ருனேவரும். (௫)

தெய்வமொன்றுண்டென்னத்தெளிகின்றமெஞ்ஞான
மெய்வதரிதே யெளிதல்ல-மெய்வலிமை
கண்டவர்போல்வாசனையாற் காசினியின்மாந்தர்சிலர்
விண்டதனு லாவதென்னவீண். (௬)

தெய்வமுண்டென்னுந் தெளிவுற்றோர்சித்தனைத்துஞ்
செய்வனெனக்கூறுந் திறலோரே-மெய்வழக்கர்
பொய்வலிகண்டஞ்சாப் புனிதர்புரைதீர்ந்தோர்
சைவ தொழிந்தநரர். (எ)

அண்ணலருள்பெற் றகங்குளிராராயுண்முற்று
முண்ணவுறங்க வுலாயாடப்-பெண்ணணங்கு
காணப்பொருள்விளைக்கக் காவலவராதியர்பா
ரூணத் தொலைவததுநாள். (அ)

பூவுலகிற் றம்மினத்தோர் பொய்த்தேவைப் போ
ற்றுதோர், தேவுளதென்னத் தெளிவியா - ரியாவும்
வல்ல, மெஞ்ஞானம் பெற்றதெல்லாம் வெட்டவெ
றும்பொய்யாகு,மஞ்ஞானத் தோர்க்கேமெய்யாம்.()

தேகமன்றுநானென்னச் செப்புந்தெளிவுமெங்கோ
னேகனன்றிவேறில்லை யென்னுமன்பும்-போகம்
வெறுக்குந்திறலுணரு மெய்யுமுள்ளஞானம்
பொறுக்குநிறை வாம்புகழ். (௯)

# எ-வது, அறம்.

கொல்லாமைநல்லூண் கொடுப்பதறிந்திகை
யெல்லாமிறையுடைமை யென்கைகோட்-சொல்லா
மை,யின்னலொருவர்க் கியற்றாமையெள்ளாமை
யன்னபிறவு மறம். (க)

சமையத்தலைவருக்குந் தார்வேந்தருக்கு
மமைவற்றவீர மழகே-சிமையமெனத்
தோற்றிமறையுந் துணைமுலையார்தோள்வேண்டார்க்
கேற்றினிது வாழ்வதழகே. (உ)

எத்தருமஞ்செய்வதினுமெல்லாம்படைத்தளிக்கு
முத்தமனைநாடி யுருகுவோர்-சித்த
மகிழப்பணிபுரிதன் மாண்பென்பார்நெஞ்சி
னெகிழவுறவா நிசம். (ந)

கொல்லுந் தொழிலோனைக் கொன்றுகொலைநீக்
குமறம், புல்லுமொருவன்புவி யனைத்து - மெல்லுற
ழத், தோன்றும்பெருநலத்திற் றேய்வதன்றிமற்றவ
ர்தா, மேன்றுமுயன் றூலுமிலை. (ச)

பொன்னாலுயிர்வெறுத்துப் போவார்பலருண்டு
தன்னாலுலகந்தனைப்படைத்துப்-பன்னுமஞ்
சூடினனன்பனெனத் தோன்றுநர்க்குமப்பொருளைத்
தேடினாலுண்டு சிறப்பு. (௪)

ஒருவன்பலசமையத் தொவ்வொருவாருக
மருவும்புதுமையென மண்ணிற்-பொருளொன்று
பல்வகைப்பூணுகின்ற பண்புணர்ந்துபாடுபடுஞ்
செல்வருக்கேயாரு நத்துஞ்சீர். (௫)

கற்றோர்மயலொழியாக் காலங்கருத்தழிந்து
மற்றோரொனினு மலிபொருட்சீர்-பெற்றோரோ
லன்னவர்பாற்சென்றிரப்ப ராகையாலம்புவியிற்
பொன்னருமை யென்றேபுகல். (௬)

மெய்த்துறவோர்தாமும் வெறுக்கரியவெண்சோ
றும், பொய்த்துறவோரேற்கும் பொருள்கொண்டு -
செய்த்தொழியி, னெல்விளைத்துச் செய்த தன்றி நீ
ணிலத்தோர் கொண்டாடுங், கல்வியினாற்செய்ததல்
லக்காண். (௭)

கற்றோர்துறந்தோர்போற் காணநடிப்போருஞ்
சற்றேனும்பொன்னைத் தணவாரோன்-மற்றோர்
வெறுக்கவல்லாரோனையரில் வேண்டுநருமுண்டே
பொறுக்கும்புகழ்ச்சிப் பொருட்டு. (௮)

பன்மதத்தோர்போல்வரோ பாடுபட்டுப் பொன்வினை
ப்போர், கன்மமொழிக்குங் கடவுளார்-நன்மகிமை
கண்டளிகூர்ஞானிகளிற் காண்பரோகள்ளமின்றி
யொண்டகைய பொன்செய்துளார். (௯)

அருளும்பொருளுமொன்றென் றுரறியவல்லார்
பொருளுமருளும் பொதுவே-தெருளுமுயர்
நெஞ்சுடையாரும்பொதுவே நீணிலத்தோர்கண்ட்
தொழி,லஞ்சுடையானும் பொதுவேயாம். (௰)



## ௯-வது, இன்பம்.

அன்றேயெனைத்தன தென்றுண்டுகொண்ட வெ
ன்கணவ, னென்றேயெனையணைவா னென்றேழி-
குன்றேயென், றேங்குமுலைத்துயரு மூரலருந்தாய்
மொழியுந், தாங்குதற்கு நானேதரம். (க)

எத்தனையோமாதர்க் கினியனுமென்கணவ
னித்தனைநாட்சென்று மிரங்கிலனே-முத்தனைய
வெண்ணகையாரோச மெலிந்தேனேமின்னார்பாற்
றண்ணளியிலானு மன்றேதான். (உ)

உன்னுணையுன்னை மறவேனென்றேதியவன்
றன்னுவியங்கு தரிக்குமோ-வென்னுசை
யென்னைவருத்து மியல்பறியமாட்டானே
வன்னையினு நல்லாயறை. (ங)

தாமக்கருங்குழலாய் தாரணியிற்செந்தழலிற்
காமக்கவலைக் கனல்பெரிதே-யாமத்திற்
கண்டுதுயினீங்கிக் கனவென்றலமருநா
னுண்டுமெகிழ்நாளு மொன்றுண்டோ. (ச)

தன்னையறிந்துந் தலைவன்றனைச்சேரா
வென்னைமடவா ரிகழாரோ-வுன்னையன்றி
யாருந்துணைகாணே னன்னவன்பாற் சொல்லியென்
னைச், சேரும் படியுறவுசெய். (ரு)

பொன்னேருமேனிப் புணர்முலையாய்பொய்யல்ல
வென்னேயமுன்னை யிகழாது-கன்னேயம்
விட்டதரத்தேனுதவி மெல்லணையிற்சென்றுமுலை
தொட்டணையு மாறொருசொற்சொல். (சு)

உன்னைக்கருதியுடன் மெலிந்தேனுன்னைநம்பு
மென்னைச்சிறிது மிகழாதே-தன்னை
யறியாதபக்குவமு மல்லவேயாசைச்
செறிவால் வருந்துகின்றேன்றீர். (எ)

வேலனையகண்ணால் வெருட்டவெருண்டுமனஞ்
சாலநொந்துவாடித் தளர்வேனோ-பாலனைய
சொல்லாற்களிப்புநல்கித் தூயபளிக்கறையிற்
சல்லாபப் பேரின்பந்தா. (அ)

மோகத்தயர்வு முயங்கினோர்தாமறியும்
போகச்சுகமும் புகல்வதோ-நாகபடத்
தல்குன்மடவாரு மாடவருமேயறிவ
ரொல்கும்பகர வென்றாலும். (௯)

இன்பம்பலவும்வலி தெய்துநலந்தேர்ந்தோர்க்குத்
துன்பமனைத்துந் தொலையுமே-யன்ப
ரிருணலியச்செய்துவக்கு மெம்பிரானீயு
மருணலமே பேரின்பமாம். (௰)

---

## ௰-வது, வீட்டுநெறி.

தெய்வமொன்றே யென்னுந் தெளிவுவரக் கற்று
ணர்ந்து, செய்வதறிந்து செயநாடிப்-பெய்வளையார்,
மாயவலைகடந்து மாதவத்தைப்பற்றிநிற்கு
நேயமே வீட்டுநெறி. (க)

நன்னூல்விதியுணர்ந்து நன்றியற்றிஞானமில்லாப்
புன்னூல்விருப்பமுற்றும் போக்குவித்துப் - பன்னூ
லுந், தெய்வமே தஞ்சமெனச் செப்புமென்த் தேர்ந்
தடங்கி, யுய்வதே நல்லவுணர்வு. (உ)

அருளொன்றேமிக்கதவ மாகுமெனத் தேர்ந்து,
தெருளொன்றும்வல்லோரைச் சேர்ந்து - மருளொ
ன்றும், புன்மையோர்தம்முறவைப் போக்கிப்பொது
வினின்று, நன்மையே செய்வதெந்நாள். (௩)

கொல்லாமையொன்றே குறியென்றதைக்குறித்து
நில்லாருறவினைத்து நீக்கியப்பா-லெல்லா
முடையாளெருவனெனுமுண்மைகண்டுவாழ்வோர்க்
கடையாள மீவானவன். (ச)

எல்லாமிறைவடிவே யென்றுணருமெஞ்ஞானம்
பொல்லாருளத்திற் பொருந்தாது-நல்லார்க்குத்
தானேவந்தெய்துமதிற் சத்தியமுந்தோய்ந்திருக்கு
நானேயென்றோதாது நா. (ரு)

வல்லபொருளை மறவாதமாதவர்பா
லல்லல்வினைப்பே யணுகாதே-கல்லனைய
நெஞ்சாரறியா நெறியுண்டாமெய்விட்டி
லஞ்சா திருப்பாரவர். (சு)

அல்லும்பகலு மறியாரவர்மனம்போற்
சொல்லும்பலநூற் றுரைகையிடத்தும்-புல்லும்
பொருளறியநாட்கழிக்கும் பூரியர்களெல்லா
மருளறியவல்லா ரலார். (எ)

ஒன்றேகடவுளென வுள்ளபடியோதாதார்க்
கென்றேனுமீடேற்ற மில்லையே-நன்றே
யுணர்ந்தவர்நூலவ்வாறே யோதுமற்றோர்வீட்டிற்
புணர்ந்தனரொன்றேதல்வெறும் பொய். (அ)

நித்தனொருவனன்றி நீணிலத்திற்பற்பலமெய்ச்
சித்தர்களுமுண்டென்று செப்புவோர்-சுத்த
மனத்தாற்குருபதத்தில் வாஞ்சைகொண்டுநின்றோ
ரினத்தாற்றெளிந்தவரன் றே. (கூ)

எங்குமுணர்வாயிருந்துபரவீடளித்துப்
பொங்குங்கருணைப் பொதுத்தெய்வந்-தங்குமிடந்
தானாகவந்து சருவபிரசாதநல்குங்
கோனானவுண்மைக் குரு. (ய)

பொதுநூல் முற்றிற்று.



அதிகாரியிலக்கணமும், நூற்பயனும்.

வேத்திரபாணிசொல்லும் வெண்பாநூறுள்ளபொதுச்
சாத்திரத்தைக்கண்டு தலையசைக்கும்-பாத்திரமே
வெல்வதெல்லாம்வென்றுவினையொழிந்தமெய்வீட்டிற்
செல்வதற்குநற்பாத் திரம்.

ஆ செய்யுள் - ௱உ.



# தெய்வமே துணை.



உ

குருவே துணை.

# இரண்டாவது சிறப்புநூல்.

காப்பு.

திருவருளானந்தன் சிறப்புநூலீரொட்
டுருவகமாக்கூற வுணர்வாம்-பருவமுற்றுத்
தந்தமுடலாதியெல்லாந் தந்துபணிவோர்க்கே
சொந்தமெனுந் தெய்வந்துணை.

## க-வது, தெய்வத்துதியுருவகம்.

ஆனைமுதலெறும்பீ றனவுயிரத்தனையு
மேனையன்றுதம்முருவா னென்றெண்ணுங்-கோனைக்
கருதிக்கருதிரு கண்ணாரக்கண்டாற்
சுருதிமுடிவெய்வதுமெய்ச் சொல். (க)

எவ்வண்ணமியாவ ரிசைவுற்றிறைஞ்சிடினு
மவ்வண்ணந்தோன்று மருளினைவிட்-டிவ்வண்ணத்
தெய்வநன்றுமற்றனைத்துந் தீதென்போர்சிற்றறிவா
னவதுகண்டொன்று நகும். (உ)

எறும்பகட்டுநுண்புழுவிற் கெவ்வுலகும்போற்றப்
பெறும்புகழுமீயவல்ல பெம்மான்-செறும்பகைஞர்
நெஞ்சங்கிழிக்கு நெடுவேலரசருக்கும்
வஞ்சமற்றமாதவர்க்கு மன். (௩)

ஒருகுடையிற்பூமி யொருங்காளுமன்னே
யருவருப்பிலாதனவே யாரும்-பருகச்
செயற்குவல்லமெய்க்குருவைச் சிட்டித்தனுப்பி
யியற்றுதற்கும்வல்லா னிறை. (௪)

பொல்லார்க்குறவுடையான் போன்றிருந்து பொன்றுவித்து, நல்லார்க்கிகல்போன்று நன்றளித்தும்-வல்லாருக், கென்ஞான்றுமெய்யுடைய தென்றில ங்குமியாவும்வல்ல, மெஞ்ஞானத்தெய்வமதேமேல்.

ஒன்றைப்பலவென் றுலகுரைக்குமுண்மையுணர்
நன்றையவனளிக்க நான்பெற்றே-னென்றைக்கு
முள்ளானவனென் றுரைப்போனெவனவனே
யெள்ளாருள்வாழு மிறை. (௫)

எங்குமிறைவ னிருப்பதுண்மையானலுந்
தங்குருவாத்தோன்றிடினே தாழ்மைபோ-மிங்கு
வருமோவென்றோது மடமையோர்க்கியாதுந்
தருமோதராதிதுமெய் தான். (எ)

தற்சிவசாட்சியது தானேதனையுணர்த்தல்
சிற்சிவர்க்கெய்துமதிற் றேர்ந்தோரோ-நற்சீடர்
போற்றுங்குருவாம் புவியனைத்துந்தம்புகழைச்
சாற்றும்பெருமையுள்ளார் தாம். (அ)

குருவடிவேதெய்வமெனக் கொள்ளாதாரொல்லாங்
கருவடிவிற்றேய்வதுமெய் கண்டேன்-றிருவடியிற்
சென்றுரொன்றேதத் திரும்புநரும்பற்பலருண்
டொன்றுக்கலந்தவரு முண்டு. (கூ)

எந்தச்சமையத்திருப்போருங் கேளுங்கள்
சொந்தக்கடவுளையான் சொல்கின்றே-னுந்த
முடலாதிமூன்று முடையகுருவே
திடமாமிதுசத் தியம். (ய)



## உ-வது, அறிவுருவகம்.

ஒருவனேயாவு முடையானென்றோர்ந்து
சருவநலமுந் தருமென்-றுருவமொன்றைப்
பற்றிநின்றுகாணப் பரிதாபப்பட்டுழலுங்
கற்றிடுநல்லோரறிவே காண். (க)

தெய்வமிலையென்று செப்பிச்சினங்கொருவன்
வைவலிதோய்வாளேந்தி வந்தாலு-மெய்வளமை
காணவிரும்புங்கடுந்துயரிற் றேரறிவா
ராணலங்குன்று துளதென்பார். (௨)

கூழிலாச்செய்ப்பகுதி கொள்ளுங்கோனுற்றலும்
வாழியென்றுதீயவர்பான் மற்றோர்போய்ப்-பாழி
லிரந்தலையக்கண்டாலு மேதமற்றநூலாற்
பரந்தறிவார்தெய்வமுண்டென் பார். (௩)

தெய்வமொன்றுண்டென்னத் தெளிந்ததேதீதொ
ழியச், செய்வதெனச் சந்ததமுஞ் செப்புவோர்-பொ
ய்வலிமைக், கஞ்சாதுமெய்கண் டளிகூர நாடுவரா,
னஞ்சாமற்றுள்ள நலம். (௪)

கல்லாரொனினுங் கடவுளேதஞ்சமென்போர்
நல்லார்கற்றொனினு நானென்போர்-பொல்லாரொன்
றேதலறிவென்பதன்றி யுள்ளதெல்லாம்பேதமையே
மேதகுசீர்ச்சித்தர்சொன்னன் மெய். (௫)

சித்தேபலனென்று தேராதசிற்றறிவோர், மெய்த்
தேவொன் றென்றிடினும் வீண்சொல்லே-யெத்தே
வைப், போற்றிடினுஞ்சித்தே பொருளென்போர்பொ
ய்யரன்றே, கூற்றிறந்த பேரறிஞர்கோள். (௬)

கற்றோரிறைஞ்சுங் கடவுளார் தாமிருக்க
மற்றோரைக்கெஞ்சி மனமெலியப்-பெற்றோர்தா
மெத்தகவோரோனுமறிவில்லாரோ யென்றுரைக்கும்
வித்தகர்தம்பேரறிவே மெய். (எ)

ஆருயிர்கொன்றூனுண் டுழிநரகிற்காளாகும்
பேருளறிவிற் பெரியருண்டென்-றோருமவர்
தம்மையிகழச் சலியாத்தவத்தினருக்
கெம்மையினு மியாமடிமையே. (அ)

கொன்றருந்தார்குற்றங் குணமேகொலைப்புலைஞர்
நன்றனைத்துந்தீதே நவில்கின்றே-மென்றதட்டும்
வாயுடையமேலோர் மலர்க்கரத்தாற்றெட்டெடுத்த
நாயுடையகாற்றுகளே நாம். (கூ)

அறிவளிக்கும்பேறுபெற்றோ ரெம்புவியிலாரும்
பிறிதோருடலருந்தாப் பெற்றிச்-செறிவடையக்
காண்பவனென்றெண்ணுங் கருத்தேதிருத்தமிகு
மாண்பதாமற்றதெல்லா மால். (ய)



## ௩-வது, அமைப்புருவகம்.

ஆர்க்கும்பெரியோ னமைத்தபடியன்றியதைப்
பேர்க்குங்குணமவனும் பெற்றிலனே-நீர்க்குமிழி
யன்னவுடல்வருந்த வாகுலத்திற்றேய்வதென்னே
பொன்னனையநெஞ்சே புகல். (க)

ஊழ்வினையிலேற்றி யுடையானுகைக்குமென்ப
தாழ்வினையர்நெஞ்சே யறிந்தடங்கும்-பாழ்வினையிற்
சென்றுபரதவிக்குந் தீமையுமுற்செய்வினைவந்
தொன்றுதலி னுண்டாவது. (உ)

ஞானம்பெறார்பிறப்பா னவதுவும்பெற்றார்தாம்
வானம்போனின்றனை மன்னுவது-மீனம்
பிறிதோருடலருந்தும் பெற்றியெனவு
மறிவாரமைப்பே நன்றாம். (௩)

வல்லார்பலருலகில் வந்துமனுவனைத்துங்
கொல்லாநலம்பெறாக் கொள்கையே-பொல்லாப்
பழவினையைக்காட்டுமெனும் பாவலரோமாளாக்
குழகனடிசேர்வ ரொன்றெனகோள். (௪)

அன்றைக்கமைத்தோ னழித்தமையானென்றமொழி
யென்றைக்குங்கேட்டு மெனயன்று-றொன்றைக்
குறியாமென்றெண்ணிக் குளறுதலுஞ்சென்னிப்
பொறியாகு மென்றேபுகல். (௫)

நாசிப்புழைவழிபோய் நம்முடலிற்புக்கவிடுத்
தாசிக்கினியானின் றுடல்கண்டு-பேசிக்
களிகூர்வோரத்தலைவன் கையெழுத்தைச்சற்று
மெளிதாமென் றோதார்களே. (௬)

தேவேதுணையென்று தேர்ந்தவருஞ்செந்தமிழ்தோய்
நாவேயினியதென்னு நாவலருங்-கூவேகூ
வென்றலறியேற்போரு மீயக்கொடுப்போருந்
துன்றமைப்பே மேலாயது. (௭)

நன்றனைத்து நல்கவல்ல நாதனவ னுன்விரும்பி,
நின்றநலந்தேரா நினைவோனேற் - பொன்றனிகர்,
சொல்லத்துயில்விளைந்து சோருமோ வென்றுசொ
ல்வோ, ரல்லற்படுவது மூழாம். (௮)

உலகிற்குதவநண்ணு மூழுடையார்நெஞ்சத்
திலகுங்கவலை தவிர்ந்தின்ப-மலகில்
புகழிடைதுய்த்தொன்றிற் பொருந்தாவிடிலவ்
விகழிறைக் கென்றோர்வதரிதே. (௯)

விதிபோம்வழிப்பிறகே மெய்யனடாத்து
மதிபோமென்றாருரைத்து மாந்தர்-சதிபோக்கு
மாவன்மிகையா லவனருளுக்காசைகொள்வோர்க்
கேவல்செய்வோ ரீண்டுசிலரே. (ம)



## ௪-வது, முயற்சியுருவகம்.

நடந்தபடிநடக்கு நாமுயல்வதென்னென்
றடங்கருதிநாட்கழிக்க லாகா-மடந்தைநல்லார்
போகத்திறைசையற்ற போதநன்றென்றுன்னியதி
லேகற்கு முண்டுமுயல்வே. (க)

நல்லூழ்வருங்காலே நன்முயற்சிகைகூடும்
பொல்லூழுமவ்வாறு போன்றதே-பல்லூழிக்
கொண்டன்முயன்றுதவுங் கோவருந்துமானிடர்கா
ளுண்டணைந்து தூங்குதலது. (உ)

நல்லோ னருண்முயற்சி நாடிமனம் வாடுதலே,
யெல்லோர்க்கு மெய்தென்று லெய்துமோ - பொல்
லோர்க்கு, நன்றருந்திவாழு நலமு மரிதாமே, யொன்
றனைத்துந் தானுவது. (௩)

நல்லுணர்வே நன்முயற்சிக் காக்க நலங்கெட்ட, புல்லுணர்வே நல்லருளைப் போக்குவிக்கும்-பல்லுரிஞ்சி, னல்லாற்சுவையே தரும்பசியின் றீர்வேதென், றில்லார்முயற்சி செய்வரோ. (௪)

பத்துவிரலதனுற் பாடுபட்டாற்பங்கயப்பூ
வொத்துவிளங்கு மொருகையாற்-றுய்த்துவப்ப
தாகுமெனக்கேட்டு மறியாரருட்குரவன்
பாகுரைபோற்செய்யார் பரிந்து. (௫)

கயலாருங்கண்ணணங்கார் காமநலஞ்சற்று
முயலாதயில்வதுண்டேன் முந்நீர்ப்-பயலாழி
சூழுலகுமுற்றுந் தொழும்புகழிற்றோய்ந்துமிக
வாழுநலந் தானேவரும். (௬)

கொல்லாத் தொழின்முயன்று கொற்றவர்தங்கோற்றிருத்தும், வல்லானைநாடி மறையனைத்துஞ்-சொல்லாமற், சொன்னநிலைகண்டு துயரொழிக்குந் தூய்மையொப்ப, தின்னமுயற்சி யென்பாரியார். (௭)

வேண்டுவனயாவும் விரைந்தளிப்போ னுண்டெனக்கண், டீண்டுகரங்குவிப்ப தேற்றமா - மாண்டுநல, மிங்குள்ளவாறென் றியம்புநரும்பற்பலரோ, யெங்குள்ளவனுமவனே. (௮)

எல்லாநலமுமிறைதருவா னென்றுணரும்
வல்லார்முயற்சியே மாண்பதா-மல்லாதார்
சிந்தையவாவடங்கச் செய்தொழின்மற்றெல்லாமும்
விந்தைவிந்தை யாவளர்க்குமே. (௬)

ஊழ்வினைவந்தாளா வுறுக்கிடினுமுள்ளத்தாற்
றாழ்வில்புகழ்க்காத் தவஞ்செய்வோ-ரோழ்விதமா
நால்வகையோநிப்பிறப்பி னையார்நமைப்படைத்தோ
ன், பால்வசிப்பார் சேர்வார்பதம். (௭)



# ரு-வது, தருமத்துருவகம்.

உடலாதிமூன்று மொருவற்குதவுந்
திடமேயறத்திற் சிறப்பாங்-கடவுளவன்
கொள்ளாவிடினுங் கொடுத்தேமென்றேதுநனை
யெள்ளார் நனியுணர்ந்தோரே. (௧)

தம்முடலமாதியவை தற்பரனதன்றாயி
னெம்முடைமையன்றவன தென்பாரியார்-செம்மு
மறிவாற்பகர்வதுண்டே லன்னேன்செயலிற்
பிறிதாவனவுமுண்டென்பேம். (௨)

அந்தந்தனுாயத் தளவறிந்து போற்றுநலஞ், சொந்தம்புலமைத் தொழிற்கென்லும் - பந்தமற்றோர்க், கெப்பொருளுந் தம்முடைமையென்றுபின்னுட்டோன்றுதலு, மெய்ப்பொரு ளாகுந்தருமமே. (௩)

எவ்வுயிருந்தம்புதல்வராமென்றேயெண்ணுநலந், தெவ்வுயிர்கொல்வேல்வேந்தன் சிந்தையினு-மிவ்வுலகே, யுண்மையெனநாடி யுருகாதா ருள்ளத்தும், வண்மை யுறத்தோய்வது. (௪)

உலகந்தழையுநல முன்னுதநெஞ்சா
ரலகில்பெருந்தவஞ் செய்தாலு-மிலகுமருட்
பெம்மான்முழுக்கருணைப் பேராற்றிற்றோய்தலுரு
ரம்மாவிது நிசமேயாம். (௫)

வல்லபெருமான் மலர்த்தாளேதஞ்சமெனச்
சொல்லவுணர்ந்துமகிழ் தூய்மையோர்-நல்லருளுக்
காளானோரொண்ண லனைத்துமறமேயா
மாளாப்புகழின ராவார். (௬)

புகழ்விரும்பியெள்ளன்முற்றும்போக்குதலையன்றித்
திகழ்தருமமில்லையில்லைத் திண்ண-முகழும்வளைத்
தெண்ணீர்க்கடலுலகுஞ் செப்புமறமத்தனையு
மெண்ணீரிதி லடங்குமே. (௭)

வானத்துவினமா மற்றையறங்களெல்லா
மேனற்புனத்தெயின ரீட்டமுத-லானமனு
வத்தனேயுங்கொன்றருந்தா வாக்கமுறச்செய்யுமறஞ்
சுத்தமதியொப்பதெனச் சொல். (அ)

கூண்டுபலரோருயிரைக் கொல்லத்துணிந்ததனேத்
தீண்டுமுனங்கண்டு சினத்தொருவன்-வேண்டும்
படையாலவரைவெல்லும் பண்புங்கருவி
லடையாமற் காக்குமறம். (கூ)

ஈகைவிரும்புநர்க்கு மின்பமேயீந்துவப்போர்
சாகையுற்றுஞ்சாகாத் தகையோரோ-யாகையா
லென்றதெல்லாநல்கி யிரப்பதெல்லாமீயுநலந்
தோன்றத்தவஞ்செயென்றே சொல். (௰)

---

## கூ-வது, தவத்துருவகம்.

எண்ணிலாமாந்தர்க் கியம்பரியசீரளிக்குந்
தண்ணிலாவன்ன தவத்திற்கும்-புண்ணிலா
வூணேமனுவனைத்து முண்ணவைப்பத்தன்னைநத்து
மாணேருப்பா னருமையா (க)

தவம்புரிந்துபேறுபெற்றுந் தாங்குபுகழ்தேரா
ரவம்புரிந்தபாதகரோ யாவார்-நவம்புரிந்து
கொல்லாமைநாட்டக் குறிப்போனெவனெனினு
நல்லானேயென்றுரைப்போ நாம். (உ)

மெய்யடியார்தாண்மலரின் மென்றுகளைச்சென்னி
யிடத், தையமின்றித்தாங்கி யருள்வேண்டும்-பொய்
யழியு, மாதவப்பேறுண்டா மனத்தேவசிக்குமிறை
யேதமற்றகீர்த்தி யெய்துமே. (ங)

சமையத்தொடக்கர்சொல்லிற் சாராமலெல்லா
மமையப்படைத்தளிப்போற் காளா-யிமையணையும்
போதுமறவாதோர் பொற்புருவம்பற்றிநிற்ப
தோதுந்தவத்து ளுயர்வு. (ச)

சருவபிரசாதந் தந்தருளத்தக்க
குருவடிவநாட்டங் குணமா-மருவமே
யென்றிருந்தாலென்று மிருந்தபடியிருக்கும்
வென்றிதருஞ்சித்தி பொய்யாமே. (ரு)

மெய்த்தேவனேவவந்து மேதினியிற்றேன்றுநரு
மத்தேவன்றானுவந் தாளினே-பொய்த்தேவர்
தம்மடியார்நாணித் தலைகவிழத்தாக்கிவென்றே
யெம்மருங்கும் போய்வருவாரே. (சா)

கொல்லும்புலையர்தவங் குன்றனையதேனுமற்றோர்
சொல்லுஞ்சொலானுந் தொலையுமே-யல்லும்
பகலுந்தனதாய பண்ணவனைக்கண்டார்க்
கிகலும்புகழு மெய்துமே. (எ)

தன்னையுடலெனவே சந்ததமுஞ்சிந்திப்போ
ரன்னையிலாப்பிள்ளை யனையாரோ-யென்னைபட்டுந்
தந்தவமேமிக்கதெனத் தாரணியுஞ்சாற்றலுறூர்
மந்தரொனும்பேர் பொருந்துவார். (அ)

யார்க்குந்துணைவ னிறையென்றுணராத
பேர்க்குந்தவமளிக்கும் பேறுண்டோ-பார்க்குட்
பிறவாதமுத்தியுண்டோ பேதந்தவிர்வுற்
றுறவாக்கலப்பது முண்டோ. (கூ)

இச்சைப்படியே யிசைவிக்குமாதவந்தான்
கொச்சைச்சிறுவர்செய்யக் கூடுமோ-பிச்சைத்
துறவோராற்காரணத்தாற் றேன்றுநராற்றூய்தா
மறவோராற்செய்ய வல்லதாம். (ய)

# எ-வது, நன்மையுருவகம்.

பிறர்க்குதவாச்செல்வத்தும் பின்னொருவர்க்கீந்துண்
டுறக்கமுறுநல்குரவேநன்றே-சிறப்பதாஞ்
சொல்வினவாப்பெண்டிரின்பந் துய்ப்பதினுஞ்சோர
மின்றே, எல்விரும்பித்தோய்வது நன்றாம். (௧)

தன்வார்த்தைகேளாத் தனயரினுந்தாள்வணங்கிப்
புன்வாலசைக்குநாய் போதநன்றாம்-பொன்வாரித்
தந்துபணிகொள்வதினுந் தாமருந்துங்கூழ்பகிர்ந்து
நந்துணைவாவென்கை நலம். (௨)

தானொருவன்வாழத்தவஞ்செய்வான்றன்னிலுமீண்
டியானொருவன்கெட்டேனு மிவ்வுலகோர்க்-கான
வுபகாரஞ்செய்வதுண்டே லொப்புகின்றேனென்னு
ம், விபகாரிநல்லவனு மே. (௩)

நன்றென்பதத்தனையு நாணத்தகுநலம
தொன்றென்றேநல்லோருணாசெய்வா-மொன்றென்று
மாளாப்புகழ்கொடுக்கும் வள்ளலருட்பேறுபெறுந்
தாளாண்மைகொண்டுவருந் தல். (௪)

பொருளின்முயன்று புரவலனுஞ்சீரி
லருளின்முயன்றழிவ தாற்ற-லிருளிற்
புணர்தற்கரமியத்திற் பூவையெழிலுந்
துணர்மணமுந்துய்ப்பதுநன்று. (ரு)

கனவிற்கடவுளைக் காண்பதினுங்கண்ணு
னனவிலவரருளே நாடித்-தினம்வருந்துந்
தொண்டர்களைக்கண்டு தொழனன்றுமிந்தமொழி
வண்டர்கட்குத்தீதா வது (சு)

கல்லார்களாசியினுங் கற்றுணர்ந்தாரேசனன்று
பொல்லாருறவிற் புகழ்கொண்ட-வல்லார்
பகைநன்றுபொன்விரும்பும் பாவையின்பந்தன்னின்
மிகைதுன்றுநோய்நலமா மே. (எ)

வித்துரமாண்மேதி விறலில்லான்மேழியினுங்
கொத்துழவன்கைத்தாற்றுக் கோனன்றுஞ்-செத்து
மொரு, தாய்கருவிற் சேரார்சொற் றள்ளுமன்னன்
கைக்கோலி, னுய்கன்றுலைக்கோ னலம். (அ)

பொன்னுனைகோடிநல்கும் புண்ணியத்தும்பொன்று
த, மன்னுங்கடவுளையே வாழ்த்தொருவன்-றன்னுவி
யின்னற்படுமு னிருமூன்றுடனெருக்கா
லன்னம்பகிர்வது நன்றும். (கூ)

நல்லோர்விதித்தபடி நன்றிசைதனன்றுகும்
பொல்லோருடனுலகப் பொய்யைமெய்யென் - றல்
லோங்குங், கூந்தன்மின்னுர்க்காளாக் குலைதல்கொடு
ந்திதா, மாந்தர் வினைக்குண்டேவலி. (ம)

---

## அ-வது, கல்வியுருவகம்.

தெய்வத்திருமொழியாச் செப்புஞ்சுருதிகளு
நைவற்றகல்விகற்ற நாவலோர்-செய்வதெனச்
சில்லோருரைப்பத் திகழ்வதென்றுற்கற்றுணர்ந்த
வல்லோர்க்கிணையாரம் மா. (க)

கல்விமுயன்றுர் கவியனைத்துங்காடுறைந்தாற்
பல்விருகத்தோடு படியிடத்து-நல்வினைஞர்
தாமுந்திரிவரிது சத்தியமென்றோர்ந்துரைக்கு
மியாமுமவைபற்றியுய்ந்தோ மே. (உ)

ஒன்றினுயிர்வருந்த வொன்றருந்தற்காணின்மனங்
கன்றித்தவிர்த்துவப்பர் கற்றுளார்-கொன்றியாக்
கொள்ளுஞ் சிதட்ரான்றிக் கொன்றூட்டுங் கொன்மி
னென்றும், விள்ளுமளற்றூட்டூந்து மே. (ங)

பன்னூற்பகுப்பிற் பதர்களையும்பக்குவத்தோர்
தொன்னூலென்றஞ்சார்தொகைக்கெல்லாம்-பின்னூ
லென், றெள்ளார்நலங்கண் டெடுப்பாரிழிவுகண்டு
கொள்ளாரொன்றேதல்கற்றோர் கோள். (ச)

அருண்மிகுத்தோர்பல்லுயிர்கொன் றுகம்வளர்க்கு
மருண்மிகுத்தோர்கூற்றுகும் வாறு-தெருண்மிகுத்
தோர்க், கன்றிவிளங்கா தருளாட்சிக்காற்றலதே
யென்றிசைப்போர்தம்மினமே யாம். (ரு)

கல்லாத்தவர்பலருங் கற்றறிந்தமூடரினும்
பொல்லாரோயென்கை புதுமையோ-வல்லார்போற்
பேசாதலைந்துழலும் பேதமையும்பேறுபெற்றோ
ராசாரங்கூறலுமுண் டால். (சா)

கற்றோர்துறந்தாற் கடவுளேதஞ்சமென்பார்
மற்றோரதுபெற்றால் வாய்மூடிப்-புற்றோலு
மான்றோலுந்தாங்கி மயக்கிப்பொருள்பறித்துச்
சான்றோர்புகழ்கெடுப்பார் தாம். (எ)

புல்லுங்கறித்தே புசிக்கும்விலங்கினத்துங்
கொல்லுந்தொழிலாற் குளிகையிட்டுச்-செல்லுந்
துறவோரிழிந்தநலந் தோன்றுமட்டுங்கற்றோ
ரறவோரொன்றேதுநருண் டாம். (அ)

நரிவேட்டையாடிவந்து நாடறியவாழ்ந்தோ
ரரிவேட்டைக்கேகநத்து மாவற்-குரியோரிற்
ருழ்ந்தவனொன்ருேராத் தரணியோர்சாற்றுபுகழ்
வீழ்ந்தருளோநாடிலமியா மெய். (கூ)

கல்லார்பலர்புகழுங் காட்சியினுங்கற்றுணர்ந்த
வல்லார்சிலர்புகழ்தன் மாட்சியாம்-பொல்லார்
பலரிகழுந்தீமையினும் பாசமற்றமேலோர்
சிலரிகழுந்தீமைகொடி தே. (ம)

---

## கூ-வது, பெருமையுருவகம்.

எம்பெருமான்வல்லோனென் றெச்சமையத்தோ
ருநத்து, நம்பெருமான்செய்யு நலத்தெல்லா - நும்
பெருமா, ஞனென்ருேதிவந்து நன்றுடையார்க்கி
ன்பநல்க, லாஞப்பெருமையின தாம். (க)

மானிடர்பாற்கேட்டபடி வாங்கிக்களிப்பதிஞ
மானியிலான்றன்பா லநுதினமு-நானிலத்தோர்
தாமுணரக்கேட்டுமவன் ருராத்தளர்ச்சிவிஞ்சிச்
சாமுவகைமேன்மை தரும். (உ)

கொன்றருந்துந்தீயோர் குலந்துதிப்பவாழ்வதினு
நன்றருந்திவாழு நரர்வாயிற்-சென்றவர்தா
முண்டெறிதன்ஞாளி யுடனருந்தியூன்வளர்க்கக்
கண்டெறிகற்றுங்கல் களி. (ங)

கொல்வானென்றஞ்சிக் கொடுங்கோலரசனுக்கு
ச், செல்வாவென்றுசிசொல்லுந் தீமையினு-நல்வா
ர்த்தை, சொல்லிவினவாக்காற்சோதியுண்டென்றே
தியவன், வல்லியிற்கூர்வாளிலொன்றன் மால். (ச)

போரஞ்சிமற்றோர் புரவலனைத்தாழுமன்னில்
வீரஞ்செலுத்தியுடல் விட்டோன்மேல் - வாரஞ்சும்
பூணையுங்கொங்கைநல்லாட் புல்லிமுத்திசேர்ந்தோ
னில், வீணேதுறந்திறந்தோன் மேல். (ரு)

தம்புகழைக்கொல்லுந் தனையர்களைப்பெற்றோரில்
வம்புடலந்தாங்கு மலடர்மே-லம்புவியோர்க்
கானந்தநல்கா ரருட்சீர்க்கமுதுகுங்கண்
மீனந்தம்பார்த்திருக்கை மேல். (சு)

செல்லாதிக்கொல்கின்ற தீயோர்புனிதத்தும்
புல்லாவிநீக்கார் புலைமேலா-மெல்லா
மொருவன்செயலென் றுணரார்தவத்திற்
குருவன்றருளென்மேற் கோள். (எ)

துறந்துந்தவம்புரியச் சோம்புமெனைப்போல்வார்க்
கறந்தவிராத்தெய்வசித்தி யாலே-சிறந்துவள
ரில்லறத்தார்மேலாகு மீகையிலாச்செல்வரினுஞ்
சொல்லறத்தார்கொள்வார்நற் சொல். (அ)

பொய்ச்சித்திகாட்டிப் புவிபுகழவாழ்வதினு
மெய்ச்சித்திவேண்டுவது மேலாகும்-கைச்சித்தாற்
பொன்காட்டிப்பொன்பறிக்கும் புன்மையினும்பொ
ன்செயற்காத், தன்காசழித்தனன்மை தான். (கூ)

எந்தப்பெருமையினு மியாவும்வல்லானிவ்வுலகிற்
சொந்தக்குருவாகித் தோன்றிநின்று-சிந்தனைபோ
லெல்லாவிளையாட்டு மீந்துமுத்திக்கேற்றநண்ணிச்
செல்லாறுமே லாயதே. (ய)

# ய-வது, பத்தியுருவகம்.

பத்தியிலாப்பாவிகளைப் பல்சமையப்பக்குவருஞ்
சத்தியத்தைத்தேறுந் தவத்தோரும்-புத்தியுள்ள
நல்லாருமிக்குணர்ந்த நாவலருமேசலன்றிக்
கல்லாருமேசக் கடன். (க)

எத்திறமையில்லா ரொனினுமிறையிடத்துப்
பத்திகொண்டோராயிற் பழுதுரூர்-சித்தியெட்டுஞ்
செய்துகளித்துத் திரும்பாதவீட்டினும்போ
யெய்துவரொன்றோதுமுலகே. (௨)

உள்ளத்திற்றேன்றி யுலகனைத்துமுண்டுவளர்
வெள்ளக்கடலனைய மெய்ப்பத்தி-யெள்ளப்
படுவதேபோன்றிருந்து பற்றிலார்தம்மைச்
சுடுவதேயென்கைமுன்னோர் சொல். (௩)

சமையத்திருந்தொருவன் றன்னைப்பிடித்தாற்
சிமையமெனவளர்ந்து தெய்வத்-தமைவுணர்த்திச்
சித்திதந்துமுத்தியினுஞ் சேர்க்குந்திறத்தினது
பத்தியென்றே சொல்லும்படி. (௪)

தாமநறுங்குழலார் தங்களுக்குங்காமுகர்க்கும்
பாமரர்க்குநன்குணர்ந்த பண்டிதர்க்குஞ்-சேமநல்கு
ம், பத்திகொண்டுநிற்கினல்லாற் பண்டைத்தலைவனு
ண்மைத், துத்தியந்தாளான்மெய்ச் சொல். (௫)

கந்தமலரிற் கலந்தாங்குநின்றானைத்
தந்தங்குருவடிவாத் தாங்கண்டோர்க்-கெந்தநல
மெய்தாதுபத்தியொன்று மில்லையென்றாலியாதுமில்
லை, வைதாலுநல்கும் வரம். (௬)

வாக்காதிமூன்றால் வழிபடுவோர்வஞ்சமறத்
தாக்காண்மைகொண்ட தனியருட்கோ-னீக்கானென்
றெண்ணித்துணிந்து மிடையுமனத்தேழையன்ப
ருண்ணிற்கும்பத்தி யுயர்வு. (எ)

அண்ணலொருவனே யாருயிர்க்குநேயனென
நண்ணவல்லார்பத்தி நலமன்றே-யுண்ண
லுறங்கன்முதலாந்தொழிலு முள்ளனவுந்தான்வந்
திறங்கவிட்டுக்கொள்ளு மவனே. (அ)

வழுவாநெறியெனுங்கை வன்பர்க்கும்பத்தி
நழுவாக்கருணையங்கை நாடித்-தொழுவார்க்குங்
கொண்டகுருவாணையவன் கோலமிலானுள்ளானென்
ன், றொண்டகையநெஞ்ச முணரும். (கூ)

அன்னோனருள்பெற் றளிகூர்ந்தட்புகழுஞ்
சொன்னோரனைவர்க்குந் தொண்டனு-நன்னேன்பு
நோற்கின்றபத்திசெய்யு நுண்ணியரேயெண்ணிமகி
ழ்ந், தேற்கின்றபேறுமொன் றுண்டே. (ய)

—oo※oo—

## ௰௧-வது, வைராக்கியவுருவகம்.

சற்குருவைத்தேடித் தயங்குகின்றதாபத்தாற்
கற்குவட்டிலேறிக் கவிபாடி-நற்குறியைத்
தூண்டியென்றூழ்காணத் துணிந்துருண்டுந்தொண்
டுசெய்யோட், டாண்டிகளும்பூமியி லுண்டாம். (க)

வல்லானைத்தேடி வருந்திச்சகிப்பரிதா
யெல்லாருமிவ்விதத்தா லென்றறியக்-கல்லாதி
யேறிவிழுந்துமெழிற் சிரநாக்கொய்தும்வினை
மாறியவர்தாமுமுண்டு மாம். (உ)

சாகத்துணிந்திருந்துஞ் சற்குருவைக்காணுமற்
றேகத்தைவிட்டோர் சிலருண்டாற்-பாகத்து
நங்கைமலர்த்து நளினமுகம்பார்க்கநண்ணித்
தங்கைகுவிப்போர்க்கேது தாள். (ங)

புண்ணியத்திறைசைப் பொருத்தத்தாற் புன்கொ
துகின், கண்ணிமைப்புங்காணுங் கடவுள்பா-லெண்
ணினைவைத், தாகம்விடுத்தோரதிகமாமன்னவனுற்,
றுகந்தவிர்ந்தோர் தமக்கு. (ச)

தன்னுடலமாதிமுற்றுந் தற்பரனதென்போர்க்கு
மன்னுயிர்முற்று மகவாமாற்-கொன்னுலக
முற்றுமவர்பேர் மொழியுமதுவைராகம்
பற்றுமவர்பெற்றிடுதெற் பாற்று. (ரு)

அங்கிக்குழியி னகமூழ்கிமீண்டோரு
மங்கினருஞ்சுற்றினரும் வைராகந்-தங்கியவர்
தாமன்றேயென்றமொழி தன்னுற்றயங்காதார்க்
கியாமன்றடிமையென்னே னியான். (சா)

மித்துருவெல்லாமுடைய வித்தகனே யென்றிரு
ப்போர், சத்துருவாலாகந் தவிர்வாரோ - சித்துரு
வாந், தெய்வமெனுஞ் சொல்லழியுந் திண்ணமென
ச்செப்புமவர், வைவதுவுந்தோத்திரமா மாம். (எ)

வைராகந்தாண்டார் மனம்பிதற்றுஞானமுற்றும்
பொய்ராகந்தன்னிற் புதையுமாற்-கைராகம்
பாடப்பரவுதலும் பாவனையைப்பற்றுதலுங்
கூடக்குறிக்கை கொடா. (அ)

பத்திமுற்றில்வைராகப் பண்புவருமன்றிவெங்கீர்த்
துத்திப்பணத்தல்குற் றேகைநல்லார்-தித்திக்குஞ்
சொற்கேட்டுருகித் தொழுவோர்க்குந் தோன்றும
தோ, வற்கேட்டுண்மிக்கதென்ப ரால். (கூ)

மின்னனிகர்வைராகம் விட்டகலா துட்பொலிய
வின்னனுகர்வோ ரொளியரோற்-கன்னலஞ்சொன்
மாதரின்பமானந்த மக்களேமெய்ப்பேறு
சாதன்முத்தியென்பதுமெய் தான். (ய)

# ய௨-வது, ஞானத்துருவகம்.

யானவனென்ருேது மிரண்டுந்திகழினல்லான்
மானவைராக மறையாது-தானறிந்த
வுண்மையேமிக்கதன்றி யொப்பில்பெருஞ்சித்தியற்
றும், வண்மையதுமாயா மயம். (க)

உண்மைக்கழிவு முளதாயினேசைதரும்
வண்மையுறுஞானத்தின் மாட்சியின்ருற்-றண்மை
யுடையார்போனீயிருந்தா லுன்னையின்னம்பூவிற்
படையாதுயர்தற் பரம். (உ)

தாயையொத்துநல்லோர் தமைக்காத்துச்சாரார்க்
கோர், தீயையொக்கு மெஞ்ஞானத் தெய்வமன்றி-
மாயையில்லை, புன்னுணர்வினீயிருந்தா லோரொட்டு
ச் சித்தும்வந்து, மன்னுவதோ ராச்சரியமா. (ங)

கொன்றருந்திவாழுங் குணத்தோர்க்குவைராகம்
பொன்றலளித்தாலும் பூதலத்தி-லொன்ற
னுயிர்நீக்காநல்லோர்க் குயர்ஞானநல்கிச்
செயிர்நீக்கு மென்கைதிறம். (ச)

மெய்ப்பத்திஞானம் விளைவுற்றமேலோர்தாம்
பொய்ப்பத்தரஞ்சும் புகழ்கேட்டா-லப்பரன்று
னல்காதிருக்கிலவ னற்புகழ்ச்சிகுன்றுமென்கைக்
கொல்காதா ரஞ்சுவதுண்டோ. (ரு)

பரிதியெனப்பிறங்கும் பான்மையுற்றஞான
மூரியோனைக்காணு வுலகிற்-கரிபோலு
நெஞ்சகத்துந்தெய்வ நினைவேயென் றெண்ணுமட
மிஞ்சலுறு மேன்மேலுமே. (சா)

எல்லோருங்காண விலங்கும்புகழுடைய
வல்லோனொருவன் வாராயிற்-பல்லோருஞ்
சொல்லுங்கடவுளில்லைத் தொல்லுலகே யுள்ளதென்
போர், வெல்லுங் கொடுமையுண்டாமே. (எ)

மெய்ப்பேருடைய விமலனுக்குமேதினியோ
ரொப்பேரிடினு மிசையுமே-பொய்ப்பேரொன்
றென்னளவுஞ் சம்மதமன் றென்றுரைப்போர்க்கிவ்
வுலகுந், தன்னளவுமுற்றுந் தரும். (அ)

என்றாழ்மதித்தோற்ற மாதியியல்புகண்டு
நன்றாழுடைய ஈரரெல்லாங்-கன்றாமை
நீக்குதற்கும்வல்லதொரு நிச்சயமுண்டென்பரது
போக்குவரவில்லாப் பொருள். (௯)

மெய்த்தகையசித்தி விளக்கொளியாமெஞ்ஞான
மித்தகைத்தென்றேதவல்லா ரியாவரோ-நித்த
னொருவனெனத்தேர்ந்தவன்பா லுள்ளதெல்லாம்வே
ண்டிக், குருவெனக்கொண்டாடலென்றென்கோள்.

---

# ௰௩-வது, துவிதத்துருவகம்.

ஓவியமுநொச்சியனு மொன்றெனன்மெய்யானலுந்
தேவிற்குவேறன்று சீவனெனப்-பாவிகள்வாய்
சொல்லுஞ்சொற்பொய்யெனவே சொல்லுந்துணிவு
டையார், நல்லுறவேவேண்ட னலம். (க)

எவ்வுயிர்க்குந்தாயா மிறையிருக்கப்போற்றும
விவ்வுயிரேமிக்க தெனவுரைப்போர்-கௌவுமகல்
வாயுடையநாயு மனுவாப்பிறக்குமுண்மை
மேயுடையநெஞ்ச ரல்லவே. (உ)

அண்ணலருட்பேற்றுக் காசைகொள்ளாரம்புவியி
லுண்ணலுறங்கலேயு முன்னுமற்-கிண்ணமுலே
நெஞ்சுருக்கக்கண்டு முயிர்நீயேயென்றேதியழற்
பஞ்சுருவிற்றீயு முடம்பார். (௩)

கற்பனைதீர்ந்த கடவுளேதஞ்சமென
நிற்பதாமுண்மை நினைவாலே-பற்பலரை
வென்றேகைமிஞ்சமிஞ்ச விண்பதிக்குமேனியொடு
சென்றேரு முண்டேசிலர். (௪)

தொண்டியற்றிப்பேறுபெறுந் தோற்றமேமிக்கதெ
னிற், பண்டிதரும்பாமரரும் பற்றுவா-ரொண்டிசை
யுஞ், செய்தோனென்னிற் சிரிப்பார்சிலர்சினந்து,
வைதோடக்குட்டி மகிழ்வார். (௫)

ஆருயிரொன்றேனு மவனென்றோர்ந்ததுண்டேற்
பாருலகமுற்றுமதே பற்றுதோ-வோருருவிட்
டொன்றெடுக்கத்தக்க வுணர்வுங்கெடும்பிறப்பால்
வென்றெடுத்தாள்சோதி யுண்டுமெய். (௬)

எல்லாமும்வல்லா னிறையென்றுணர்ந்துநினைத்
துல்லாசத்தோத்திரமு மோதியப்பாற்-சல்லாபக்
கேளியெனக்கலந்துங் கீழ்மையுன்னித்தொண்டுசெ
ய்வோர், தாளிணையைச்சூட்டுந் தலை. (௭)

எந்தநலத்தையிகழ்ந்தாலு மெம்பெருமான்
சொந்தவடிமைத் தொழில்செய்வோர்-சந்ததமும்
வேண்டுவனநல்கி மிகக்களிக்குமெய்யருளை
யாண்டுமிகழ வொண்ணாதே. (அ)

இல்லாப்பொருள்சிறிது மில்லானையெப்பொழுதுஞ்
சொல்லாமற்சொல்லுந் துறவோரைப்-பொல்லாரெ
ன், றெண்ணுகின்றகுற்றமன்றி யெல்லாம்பொறுக்க
வொளிர், கண்ணுநல்கிக்காக்கு மவன்காண். (கூ)

மெய்யன்புசெய்வதுவும் வீணல்லமெய்க்கடவுள்
பொய்யன்புங்கொண்டருளும் புண்ணியன்காண் -
பெய்ய, மழைபடைத்துப்பார்புரக்கு மன்னவன்கா
ண்கண்டீர், விழைமினவன்றன்னை யென்றுமே. (ய)

---

# யச-வது, அத்துவிதத்துருவகம்.

தானுந்தனையுணராத் தன்மயத்தைச்சொன்மதுரத்
தேனுங்கசக்குமொரு தித்திப்பை-யானுந்தா
னென்றதுவும்பொய்யா மிடத்தையிரண்டென்போ
ரன்றருளின் மூழ்காதவர். (க)

என்றுந்துணைவிருப்பி லேகனையென்றெல்லோருஞ்
சொன்றுந்துதிக்குஞ் சுயஞ்சுடரா-நன்றுடனே
தீதுந்தானுன செயலைச்சிறப்பித்த
லேதுந்தானுன தென்பதே. (உ)

எப்பொருளுந்தானு யிருந்ததன்பாலேதிருக்கு
மெய்ப்பொருளொன் றென்றோதுமெய்யிருக்கும் -
கைப்பொருளுந், தம்மலதென்றெண்ணுந் தவத்தோ
ர்கிளைவிருக்கு, மும்மலத்தோரொள்ளு முதல். (௩)

ஒன்றன்றிமற்றொன் றுளதென்னுருள்ளுவகை
தன்றன்கருத்தறிந்த தன்மையே-கொன்றன்றி
வாழாருமொத்துரைக்கும் வார்த்தைக்கயர்கைபற்றித்
தாழாப்புகழ்புரிவார் தாம். (௪)

ஆற்றலருளென் றறிந்துள்ளாரத்துவிதம்
போற்றல்வரலும் புதுமையே-தோற்ற
லனைத்துமயலென்றிடலு மாகும்புவிக்குத்
தினைத்துணைநன்றெய்துவ துண்டேல். (ரு)

துய்க்குமினிப்பறியான் றுய்த்துவக்குந் தூயவன்
பாற் கைக்கும்விதஞ்சொன்ன கதையாகு-மெய்க்கு
ளொரு, பொய்யணையா தென்பவர்பாற் போக்குவர
வோது, மையச்சமயமற் றெல்லாம். (சூ)

காலங்கருதியுழல்கட்செவிநேர் பொய்ச்சமைய
மூலங்கருதின் முனிவோரோ-சாலப்
புகழுணைக்கிற்சிற்றறிஞர் புந்தியஞ்சனுடி
யிகழும்பொருந்த வைத்தாரோ. (எ)

ஒன்றனைத்துமான வுபாயமறியாருணர்ந்த
நன்றனைத்துநன்றல்ல நன்குணர்ந்தோர் - குன்றனைத்
தாங், குற்றஞ்செயினுமது குற்றமல்லவென்றுணர்ந்
தா, ரற்றந்திருவரு ளுற்றார். (அ)

சித்ததனையும்பகுப்போர் சிந்தையொன்றுசேராமு
னெத்தகையாற்சித்திநல மெய்துவார்-தத்தமது
சாட்சிவடிவமே தற்பரமென்றோதிடினுங்
காட்சிவடிவுணரார் காண். (௯)

சித்துருவையொன்றத் தெளிந்தடங்குஞ் செல்வரு
க்கே, யத்துவிதஞான மழகாகுங்-கத்துந்
துவிதமேநன்றென்று தொண்டுசெய்யப்பெற்றோர்க்
கவிதத்தழகாகு மாம். (௰)

~~~
~~~

# ௰௫-வது, சமரசத்துருவகம்.

காணுவடிவத்தின் கற்பனையிற்கண்டதனை
நாணுமலேத்துவது நன்றென்று-தோணுமற்
சொல்லலுணராத் தொழும்பருக்குநல்லோனே
வல்லசமரசக்கோமான். (௧)

பூரணச்சீருண்மைப் பொலிவுபுரைதீர்ந்த
காரணத்தார்நாட்டங் களிவாரி-யாரணங்கள்
போற்றுநலம்பொன்றாப் புகழ்ச்சிபுலவர்கண்டு
சாற்றுமவிரோதஞ் சமம். (௨)

கற்றோர்சமரசமுக் கண்ணனையதாமொருசார்
புற்றோர்நிலையொருகண் ணொக்குமே-மற்றோ
ரெவருந்தமக்கினிய ரென்றுணரவாழுந்
தவருந்தரணியி லுண்டாம். (௩)

குற்றங்குணத்துடனே கூடுங்கொடிதுணரப்
பெற்றசமரசத்தோர் பேராண்மை-முற்றப்
புரியாதிறையிருந்தாற் பூவுலகின்மற்றப்
பெரியாருமுண்டெனல் வம்பே. (௪)

மற்றநிலையான்மகிழ்வோரின் மாசற்றோர்
பெற்றசமரசத்தின் பேராக்கங்-கற்ற
புலவருயர்ச்சியென்னும் போதமுடையார்க்
கிலவங்கனியு மெய்துமே. (ரு)

தந்தவமுமெம்பெருமான் றண்ணருளுஞ்சந்திக்கி
னெந்தலமுமெய்து மென்றுணருஞ்-சொந்தச்
சமரசமேதஞ்சமென்னுஞ் சத்தியத்தோர்தாமே
தமரனையாரென்பார் தவர். (சூ)

தெய்வச்சமரசத்திற் சிந்தையவாநீங்குமன்றிச்
செய்வதனாலுண்மை திகழாதே-பொய்வலிமை
மெய்வழக்கைத்தள்ளல்கண்டால் வேளைப்பயனென
த்தேர்ந், துய்வதற்கோநாடுநர்க் குண்டு. (எ)

சித்துடையார் சொல்லே திறனென்றுணர்ந்துளைப்
போர், வத்துநிலைதேறவல்ல மாக்களே-செத்துப்
பிறவாமைவேண்டிநிற்கப் பெற்றோரெவரு
மறவாதவரவ ராவார். (அ)

ஆகத்தடங்குவதே யாவியென்றுமன்னைவயிற்
றேகத்தகுமுயிரோ யில்லையென்றும்-போகத்
துயர்ந்தசுகமில்லையென்று மோதுநராற்றானு
மயர்ந்தழியாதார்பொதுவோ ராம். (கூ)

எல்லாஞ்சமரசத்தி லெய்தலாலிங்கிலையி
லில்லாநலஞ்சிறிது மில்லைகாண்-கொல்லா
நலமேயினியதென நாடிநிற்குநெஞ்சே
நிலமேலும்வாழ்துண்டு நீ. (ய)



# யசூ-வது, முத்தியுருவகம்.

எத்தகைத்துமுத்தியென யாரியாரிசைந்தாலு
மத்தகைத்தேமுத்தி யவர்க்காகு-மித்தகைத்தென்
றேதரியதென்பதென்னே யூன்விட்டோருநெடுக்கு
மேதந்தவிர்வ தென்பதே. (க)

முத்திச்சுகமே மொழிவரியதென்றலு
மத்திருவேமிக்கதென லாகாதோ-வெத்திசையும்
போற்றுமொருவன் புகழேயுயர்வெனக்கண்
டாற்றுந்தவமுயற்சி யாம். (உ)

வல்லானைச்சற்குருவின் வார்த்தைப்படிவிரும்பிக்
கொல்லாத்தவத்தாற் குறிகண்டு-நல்லார்க்
குயிர்போன்றுளிர்பெரியோ ரோகைகொண்டு மற்
றோர், செயிர்தீர்த்தளிக்கை சிவம். (௩)

இல்லந்துறந்திரந்துண் டெல்லாமிறைவடிவாச்
சொல்லன்பர்தங்குழுவிற் ரேய்வுற்றுக்-கல்லன்ன
நெஞ்சுருகப்பாடி நினைவுகொண்டுநிற்போர்க்கே
யஞ்சுபொறியடங்கு மாம். (ச)

நமையறிந்துகாக்குமொரு நாதனன்றிச்சற்று
மமையுந்துணையிலையென் றுய்ந்து-சமையமுற்றுங்
கற்பனையென்றோர்ந்துநலங் கண்டுகளிகூர்ந்து
நிற்பதேமுத்தி நெறி. (ரு)

தெய்வமொன்றென்னத் தெளிந்துமற்றோர் சீவ
னுடற், கொய்வதருந்தலற்றுக் கோதகன்ற-மெய்வ
லிமைத், தொண்டுபுரிந்தருளிற் றோய்ந்துமகிழ் தூய்
மையதே, பண்டுதொட்டுக் கூறும் பதம். (சு)

சித்திபெற்றும்பல்பிறப்பிற் சேருந்திருவாய
முத்தியெதென்றுய்ந்து மொழியுங்கா-னத்தியவா
றெல்லாமிகத்திலடைந் தின்னுமொருதாய்வயிற்றிற்
புல்லாமைமற்றனைத்தும் பொய். (எ)

மெய்யடியார்பொற்றுளின் மென்றுகளைச்சூடாத
பொய்யடியார்முத்தி புகுவாரோ-வைய
மடைந்தாரொன்றேதவிறந் தன்னவரோடீண்டுற்
றிடைந்தாரும்பற்பல ருண்டே. (அ)

மாதவப்பேரின்ப மயலகன்றமெய்யுணர்வே
யேதமற்றபேறுமுத்தி யென்பதே-போதமுற்றி
நானென்றழியா நலமேகருதிநின்றால்
வானென்றவல்லோன் வரும். (௯)

பெற்றயில்வுற்றேனும் பெருமலிகழ்ந்தேனும்
பற்றறுக்கவல்லார்க்கே பந்தம்போய்ச்-சொற்றறியா
வின்பம்பயக்குமுத்தி யெய்துமெனத் தேர்ந்தோர்க்
கே, துன்பம்போமென்கைவல்லோர் சொல். (௰)

சிறப்புநூல் - முற்றிற்று.

ஆ செய்யுள்-௱௬௨.



சிற்றறிஞர்வேண்டாச் சிறப்புநூற்செந்தமிழ்ப்பாக்
கற்றறியவல்ல கருத்தோர்க்கு-முற்றத்
துறந்துபிறிதோருயிர்க்குத் துன்பம்புரியா
திறந்துபிறவாமை யெய்துமே.



## தெய்வமே துணை.



உ

குருவே துணை.

# மூன்றாவது திருவெண்பா.



காப்பு.

திருவெண்பா வென்றொருநூல் செப்பிமகிழக்
குருவென் றறிவறிந்தோர் கூறு—முருவென்ற
னெஞ்சகத்தினின்று நிறையுணர்வு நல்காதோ
வஞ்சலெனச் சொல்லியது.



## தெய்வநலம்.

தெய்வம்பழமை திருவருட்சீர்சித்துருவ
மெய்வலிமையானந்தம்வீட்டுமுதல்-செய்வதெல்லாந்
தானாகிச்சாட்சியாய்ச் சத்தாகிச்சாற்றரிய
வானாகிநின்ற மயம். (க)

எந்தவாறெண்ணி யெவர்பணிந்தாரன்னவருக்
கந்தவாறாகி யவிருமே - சந்ததமும்
பல்லோர்வழக்காடப் பார்த்திருந்தும்பாராதா
யெல்லோர்க்குமேலா மிறை. (உ)

பரிதிமதியுடுக்கார் பஞ்சவகைப்பூதந்
திரிதலொடுநிற்கைகொண்ட சீவ-ருரியவெல்லாஞ்
சிட்டித்தளித்தழிக்குந் தெய்வமொன்றுசிற்றறிஞர்
மட்டிற்பலவா வது. (௩)

தாயாகித்தந்தையாய்ச் சற்குருவுமானதெய்வ
மாயாமனத்தை மயக்குவதுந்-தேயாத
மெஞ்ஞானந்தந்து வெளிப்படுத்தியாள்வதுவு
மஞ்ஞானத்தோரறிவ தா. (௪)

நம்புமவர்குற்ற நலமாகக்கண்டருளி
வெம்புதுயர்முற்றும் விலக்குமே-யம்புவியோ
ருண்டென்றிலையென் றுரையாடவுள்ளுவகை
கொண்டெங்குநின்றதொரு கோ. (௫)

நல்லார்வயிற்றி னரராப்பிறந்திடினும்
வல்லார்க்கருட்சீர் வழங்குமே-யெல்லார்க்கு
முண்ணவூணூட்டி யுறங்கவுறக்காட்டு
மண்ணலெனவாழு மது. (௬)

தேர்வேந்தர்தங்கோற் றிறல்காணுந்தெய்வமென்னு
மோர்வேந்தழியா துறுவதாற்-சீர்வேய்ந்த
நல்லுடலுமூற்றுடலு நானிலத்தோர்தாங்குவர்முற்
புல்லும்வினைத்திறமை போல். (௭)

கொன்றாரைக்கொன்று கொடாதாரையேற்கவிட்டுத்
தின்றாரைத்தின்னச் செயுந்தெய்வ-நன்றாய
நீதியுடைத்தென்றே நினைக்குநிரம்பியநூ
லோதியுணர்ந்துய்ந்தோ ருளம். (அ)

அண்டபிண்டமாதி யனைத்துமரைநொடியிற்
றெண்டர்மொழியாலுந் தொலைக்குமே-கொண்ட
லரசன்கைக்கோலி னளவிதென்றுசெல்லா
முரசடித்துப்பெய்யவைத்த முன். (கூ)

வேதங்கள்பற்பலவும் வீடுடையமேலோரும்
போதங்கடந்தபரி பூரணத்தைப்-பாதமிரண்
டுள்ளகுருவென்றே யுரைப்பதுணர்ந்தோர்க்கே
கள்ளமறுஞானக் கனி. (ω)

## இல்லறவியல்பு.

## க-வது, இற்புகழ்ச்சி.

உலகந்தழைவதற்கு மொன்றனருட்சி
றிலகுதற்குஞ்செங்கோ லிறைக்குங்-கலகச்
சமையங்கள்வாழ்வதற்குஞ் சாத்திரங்களுக்கு
மமையுந்துணையில் லறம். (க)

நல்லாருந்தீயாரு நன்குணர்ந்துநன்றியற்றும்
வல்லாரும்வெற்றிவேள் மன்னருமற்-றெல்லாரு
மில்லறத்துச்சேயினமே யாவுமாமொன்றடியா
ரல்லலறத்தோன்றலுமொத் தாம். (உ)

சுடரொளியும்பல்புனலுந் தொண்டர்களுந்துய்ப்பும்
படருயிருங்காலும் படியு - மிடனகன்ற
மோடுந்திகழநின்ற மூதுலகுமில்லறமென்
வீடுஞ்சமமாகு மே. (ங)

இல்லறத்திற் றேன்றிமுத்தி யெய்தினருமெய்தக
ண்ணிச், செல்லமனத்தைத் திருத்துநரு - மெல்ல
மெல்லச், செல்வோருஞ் சென்றுதவஞ் செய்வோ
ருஞ் செப்புநருஞ், சொல்வோருக்காமோ தொகை.

மாற்றுக்கடங்கரிய வன்பசியால்வாசறெுறுஞ்
சோற்றுக்கலைந்துமனஞ் சோராம-லேற்று
வருவார்க்கும்பிச்சையிட்டு வாங்காமற்பட்டுண்
டருவானவர்களு முண்டாம். (ரு)

வேண்டார்க்கும் வேண்டுநர்க்கும் வீடளிக்கத்தக்
கவண்மைத், தூண்டாவிளக்கிற் றுலங்குஞ்சே - யா
ண்டா, னருளப் பெறுவோ ரறம்வே றென்றன்று,
லிருளுற்ற தல்லவிலம். (சு)

உலகைத்துறந்தவர்போ லூர்காணநின்றுங்
கலகத்துணைவிழியார் காத-லிலகையான்
மாலையிட்டோர்கோடி மகிதலத்துண்டாதலினல்
வேலையினுமில்லறமே மேல். (எ)

முற்றத்துறந்த முனிவோருந்தெய்வமெனப்
பெற்றதொன்மையில்லறத்தார் பேராக்க-மற்றவரா
லெள்ளப்படாமுன் னிருந்ததென்றோர்ந்தேத்தலுறு
ங், கொள்ளப்படாததென்றே கோள். (அ)

நன்மகவையீனு நரனுக்கும்வீடென்றே
புன்மதத்தோர்தாமும் புகல்வரால்-வன்மதமா
மில்லறத்தைத்தீதென் றிகழ்வதெளிதல்லச்
சொல்லறத்தின் முந்தலுற்றது. (கூ)

நானிலச்சீரத்தனையு நன்கமைத்துக் கொண்டொ
ருவன், மானிடத்தைச் செய்தவன்றே வந்தவற-மா
னியிலா, வில்லறமேமிக்கீண் டிலங்குவதுமவ்வறமே,
நல்லறத்தின்மெத்த நலம். (௰)



## உ-வது, நற்கொள்கை.

ஈன்றதாய்கல்விநல மெய்தப்பயிற்றுதந்தை
யான்றகுரவ னறிதெய்வ-மேன்றமட்டு
மீவிரக்கநல்லோ ரிணக்கமிவையேழு
மாவியென்கை நற்குணமேயாம். (க)

முன்னோர்க்கவர்தோளா முன்னின்றுதந்தோளாப்
பின்னோர்தமைத்தாங்கிப் பெற்றோருட்-டுன்னோகை
கண்டுலகுமூருங் கழறத்திகழுநல
முண்டுகுடிப் பிறந்தோர்க்கு. (உ)

குலத்துக்குரவனையூர்க் கொற்றவனைக்கல்வி
நலத்துக்கினியவனை நாரி-வலத்திருக்கத்
தத்தஞ்செய்தோனைத் தவத்தோனைப்பாவலனை
நித்தம்புகழ்வது நன்னீர். (ங)

சொன்னங்கொடுப்பதினுந் தோகைநல்லா ளீவதினு
மன்னங்கொடுப்ப ததிகமென்று-தன்னகத்தில்
வந்திரப்போர்க்கேனும் வழங்கத்துணிந்துநிற்கும்
புந்தியுற்றுலெய்தும் புகழ். (ச)

ஈகைநலந்தேர்ந் திரக்கத்தோடியாமற்
சாகையற்றபேர்நிமித்தந் தந்தேனு-மோகைமொழி
கேட்டுக்களிக்குமவள் கீழ்க்குலத்தோனானலு
மேட்டுக்குலத்தின னாமே. (ரு)

புகழ்விழையாமாந்தருக்குப் பொற்பணந்தேவாமா
லிகழ்வதனுக்கஞ்சா னெனக்கண்-டகமகிழ்ந்து
நல்லோனெனும்பெயரோ நாடிநடக்குமவ
னில்லோர்பெருங் கூட்டத்தேறு. (சு)

தன்றந்தை செய்தவத்தைத் தாரணியும்போற்று
ம் வண்ண, நன்றன்றிச்செய்யா நரனொருவன்-கொ
ன்றன்றி, வாழாக்குலத்தின் மகவாகான் வந்தாலுந்,
தாழாநெறிசுமப்பான் றான். (எ)

உலகோரிகழ்குலத்தி லுண்டாமொருவ
னிலகோர்நலஞ்செய் திருந்தா-லலகைநிகர்
தீயாரிகழ்ந்தகல்வார் செந்நெறிகண்டந்நெறியின்
மேயாருறவுகொள்வார் மெய். (அ)

தங்குலத்தோர்தந்நிமித்தஞ் சாராமற்றன்னறிவாற்
பொங்குபஞ்சபாதகமும் போக்கலா-மிங்குபல
நூறேடியாய்ந்துமன நோவதினுநுண்ணியர்செல்
லாறேசென்றுய்ந்து கொள்ளலாம். (கூ)

நல்லகுணங்கல்வி நாடனைத்துஞ்செய்தளிக்கும்
வல்லபொருணட்டம் வாய்மையே-சொல்லலுயிர்
கொல்லாமைகொன்றதனைக் கொள்ளாமைகொண்டி
ருக்கு, மில்லாரைத்திய ரென்போரியார். (ம)



# ரு-வது, உயர்குடித்தோற்றம்.

உயர்ந்தகுடிக்கழகா மொன்றினைக்காத்த
லயர்ந்தமனத்துக் கழகாஞ்-செயங்கொடுக்குந்
தெய்வத்தைநாடித் திகழ்வதுநற்சேய்க்கழகு
மெய்வர்த்தனை செயலாமே. (க)

மேற்குடிதன்கைதாழ்ந்து மெத்தமெலிந்தாலு
நாற்குடியுநம்பி நடக்குமே-பாற்குடத்தை
முற்றும்வறுமைவந்து முட்டிடி னுஞ்சிற்றெறும்பு
சுற்றும்பலகோடி சூழ்ந்து. (உ)

பொன்னாலுயரிற் புகழென்பார்புண்ணியச்சீர்
தன்னாலுயர்கை தவமென்பார்-நன்னாக்க
ளீகையிரக்கமியைந்தக்கா லுண்மையென்னு
மாகைக்கறிவு துணையாம். (ந)

பொருளளவின்மேலாப் பொறையிற்கொடையி
லருளிற்குலத்தி லறிவிற்-றெருளிற்
சிறியவர்களானுஞ் சேவிப்பாருண்டா
லறியுமுயர்வத்தனையு மாம். (ச)

ஒருவர்க்கொருவ ருயர்குடியென்றேதி
லருவருப்புற் றங்கிகரியாராற்--சருவசன
சம்மதமாநற்குடியுஞ் சாற்றரிதாற்றன்மமுற்று
லெம்மதத்தோர் தங்குடியுமே. (ரு)

நற்குடியிற்சேயா நலமும்பெறலரிதாற்
பொற்குடியுமாதல் புதுமையே-யிற்குடிக
ளெல்லாமுயர்குடியே யீனவல்லசேயின்று
லல்லாமலெய்வ தரிதாம். (சு)

வானனையமேற்குலத்தில்வந்தோர்க்குவண்சுவைத்தீந்
தேனனையசொல்லே சிறப்பாகு-மானனைய
கண்ணருமஞ்சுங் கடுஞ்சொல்லோரானலு
மெண்ணருலகத் தினர். (எ)

விரும்புந்தவப்பயனு மேற்பாற்குலத்தில்
வரும்புனிதர்தம்பகையு மாண்பே-யிரும்பனைய
வுள்ளத்துக்கீழோ ருறவுமுணர்வுடையா
ரெள்ளற்குத்தக்க விழிவே. (அ)

மாடைமலைச்சாரல் வாயசமும்பொன்னுருவிற்
சாடைதருமென்கை சகசமாற்-கோடைமயி
லென்னத்தளரு மெளியோருயர்குடியிற்
றுன்னலுறிற்கொள்வார் நற்சொல். (௬)

உலகமுற்றும்வாழுநல முன்ன லுணர்வாற்
கலகமற்றநன்னெறியைக் காணல்-விலகரிய
நட்பிற்பிழைபொறுத்த ஞகரிகமிந்நான்கும்
பெட்பிலுயர்வார் பெறல். (௭)



## ௪-வது, மனைமாட்சி.

கொண்கன்மொழியே குறியென்றுணர்ந்தியற்றும்
பெண்களரிதிற் பிறக்கையால்-வெண்கருத்தோ
ரில்லறத்தைப்பொல்லாதென் றேற்றருந்தவீடுதொ
றுஞ், செல்லறத்திற் சேர்ந்தார் சிலர். (க)

செத்தார்பிழைப்பதற்குஞ் செய்யவல்லசித்துடைய
வித்தாரத்தோரும் வெருள்வாரோ-முத்தாரந்
தாங்குமுலையாரிற் றங்கொழுநன்றெய்வமென்னும்
பாங்குபெறுமவர் தம்பால். (௨)

மாணர்தங்கற்பெனுந்தி வையகத்துச்செந்திக்கு
மானதமாதவமா மங்கிக்குந்-தேனய
முத்தமிழோர்கோப மொழிக்கனற்குமேலாமென்
றெத்தகையோர்தாமுரையா ரே. (௩)

கற்புடையார்தம்மெழிலைக் கண்டவுடன்காமுகர்க்கு
மற்பமதிநீங்கி யறிவுண்டாம்-விற்பனர்க்குஞ்
செந்தியிற்பூளையெனத் தீயும்விதியடுத்தாற்
றந்திருமால்விளையுந் தான். (௪)

தன்னிலையாட்கொண்ட தலைவனுக்கத்தன்மையே
நன்னிலைமையத்தனையு நல்குமே-பன்னிலைமைப்
பெண்கொண்டலைவோன் பெருந்தகையோனானு
மெண்கொண்டுதானே யிறும். (௫)

பல்வேந்தர்போற்றப் படிமுழுதும்பார்த்தளிக்கு
நல்வேந்தன்வாழ்வி னவில்கின்ற-சொல்வேண்டி
யெய்தலருந்திமகி ழின்முகத்தாடன்னைமணஞ்
செய்துடையான்வாழ்வே திறம். (௬)

மானமெழிலாக்கம் வாய்மைவருந்தாமை
யேனமனையா ரிணக்கமின்மை-யானருளுங்
கன்றனையார்சேர்க்கை கலங்காதகற்பறிவு
நன்றடைவாற்சேர்வா ணலம். (௭)

கள்ளர்தநெஞ்சுடைய காதலியைச்சேரொருவன்
கொள்ளாதசெல்வங் குவலயத்துந்-தள்ளாம
லெந்தச்சமையத் திருப்போருங்கொண்டாடு
மந்தத்தலத்து மில்லையாம். (அ)

ஈனரிவரொன் றிகழப்படுஞ்சிலரு
மானமுடைய மனைவியான்-ஞானமுற்று
வீடடைந்துமெய்ப்புகழா மேனிகொண்டுசாகாம
னுடடைந்தாரென்பார் நரர். (கூ)

கைதவமும்பொய்யுங் களவுங்கொலையுமின்றிச்
செய்தவத்தினூறுவந்தாற் றேறலா-மைதவழ்வெற்
பன்னமுலையாரருங்கற்பிற் சோர்வுவந்தா
லென்னபட்டுந் தேறவொண்ணுதே. (ய)

---

## ரு-வது, மக்கட்பேறு.

இன்பத்தவாநெகிழ்மு னேனக்குருளையென
வன்பற்றபன்மகப்பே றுவதினுந்-தன்ப
லசையுமட்டுநோன்புற் றரிமாப்போலோர்சே
யிசையப்பெறுவது நன்றே. (க)

கற்றோர்மொழிகேட்டுக் காதலற்றமெஞ்ஞான
முற்றோர்தம்பொற்ற ளுறப்பணிந்து-மற்றோரு
மந்தோவென்றேங்க வருநோன்புற்றீன்றெடுக்க
வந்தோனேநல்ல மகன். (உ)

பல்லோர்க் குதவிசெய்வோர் பாராள்வோர் பற்ற
றுப்போர், வல்லோ னெனுந்திருப்பேர் வாங்கு
வோர் - பொல்லோரை, வென்றுலகினன்றே விளைப்
போர்முதலோர்தா, நன்றுடையாரீன்றநரர். (ங)

பல்குடியாம்பல்சேய் பயப்போரிற்பாடுடைத்தா
மெல்குலவுமட்டு மிலங்கும்பேர்-புல்குதலை
மைந்தனென்றுபெற்றுடையமானிடர்மேலாவனொன்ப
தந்தகர்க்குத்தோன்று தது. (ச)

செங்கோனிலைநிறுத்தித் தீயகோற்சீரழித்துப்
பொங்கோதமன்ன புகழ்கொண்டு-நங்கோ
னொருவனேயாமென் றுலகுணரச்செய்யுந்
திருவுருவும்பெற்றோர் சிசு. (ரு)

பெண்மகவுமாண்மகவும் பெற்றுக்களிகூரா
தெண்மருவுநெஞ்சகத்தானில்லறமுந்-திண்மைபெறு
மேவார்பணிய விளங்குசித்தும்வீடுமின்றிச்
சாவார்துறவுஞ் சரி. (சா)

பொல்லார்வயிற்றகத்தும் புண்ணியத்தோர் தோ
ன்றலுண்டா, லில்லாமலடரினு மேற்றமே - வல்லா
ரிகழத்தகுமகவொன் றீன்றேனதன்சேய்
புகழத்தகுநிலைக்கும் போம். (எ)

நலத்தோர்மகவுதித்து நன்றியற்றிலந்தக்
குலத்தோரனைவருக்குங் கொற்றஞ்-சொலத்தாங்கு
மல்லாதனசெய்தா லன்னைபிதாவாதியரா
மெல்லார்க்கு மெள்ளலுண்டாமே. (அ)

மென்குதலைச்சேயின் வினைத்திறத்தையாராலு
நன்குணரக்கூடாத ஞாயத்தால்-வன்குணத்துத்
தீயோருங்கொள்வார் தெவிட்டாக்கனியிதென்று
வாயோரனைவருஞ்சொல் வார். (கூ)

தற்சிவசாட்சியதே தஞ்சமெனச்சார்ந்தோரு
நற்சீடர்வேண்டுமென நாடலா-விற்சிறி
றள்ளைமகவாகார் தாரணியிலில்லையாற்
பிள்ளையென்கையெள்ளப் பெறு. (ω)



## ௬௨-வது, நட்பு.

நட்பின்றிவாழு நரனைநவிலுங்காற்
பெட்பின்றித்தோன்றும்பிணம்போல்வான்-நட்பறவை
யென்னத்தமரோ டிருந்துண்டளிகூறு
நன்னயத்தோன்கண்டு நகும். (க)

இன்முகத்தா னன்மொழியா னீகையானேற்றத்
தான், வன்முகத்தார்தம்மை மருவாதான்-றன்முத
ல்போன், மற்றோர் பொருளையெண்ணும் வண்மை
யானென்றுரைக்கப், பெற்றோனை நட்பாப்பெறல்.()

சக்களவன்றன்னுறவுந் தான்வாழப்பார்த்திருக்கு
மக்களுறவுங்கொடுங்கோன் மன்னுறவு-மிக்கபுகழ்
வேண்டாருறவும் விரும்பாருறவிருந்தா
லாண்டானுக் காளாகலாம். (௩)

நன்றுணர்வார் தம்முறவு நாற்றிசையும் போற்றி
சைக்கு, மொன்றுதுணையென்றிருப்போ ருள்ளுற
வுங் - கொன்றுதின்னு, மாண்போங்கச்செய்யும் வய
வேந்தர் தம்முறவும், விண்போகாதென்கைவிதி. ()

கட்டார்மனத்துயர நந்துயரேயென்றகற்றி
விட்டார்மனுக்குலத்தின் மேலாவார்-கெட்டாரொன்
ரோராமற்பேசி யுறவுமறந்துமுகம்
பாராதிருப்போர் பதர். (ரு)

சேர்ந்தார்பொருளைச் செலவுசெய்துதம்பொருளை
யோர்ந்தார்க்குநல்கா துறக்காத்துச்-சார்ந்தார்
கயவனெனுஞ்சொல்லுமுருக் காதினனுவாழ்வோ
னயவசனம்பேசி நகும். (சா)

இட்டம்பெரிதென் றிருப்போற்கிடர்வருங்கா
னட்டவர்முன்னின்று நலஞ்செய்வார்-கட்டமுற்றுப்
பொன்றேடிவம்பிற் புதைத்திருப்போற்கப்பொருளே
தன்றேகநாசந் தரும். (எ)

கற்றோருறவாற் கவலைபோங்காதலறப்
பெற்றோருறவாற் பிறவிபோ - மற்றோளார்
தம்முறவாற்சத்துருப்போந்தையனல்லாடன்னுறவா
ற், பொய்ம்முயக்கத்தோர்விருப்பம் போம். (அ)

நன்முயற்சியோங்க நவின்றுநவைசார்ந்த
புன்முயற்சியத்தனையும் போக்குவித்துத்-தன்முய
ற்சி, கூடப்புரிந்து குணம்போனடந்துசற்று
மூடத்தகாத துறவு. (கூ)

ஒவ்வொன்று லொவ்வொருவ ரொவ்வொருசீருற்
றிடலைச், செவ்வொன்றநாடித் தெரியுங்கா - லிவ்
வொன்றே, மேலாமென்றோத விளங்குவது நட்பெ
ன்று, நூலாய்ந்திலாருணர்வா ரோ. (மி)

## எ-வது, ஈகை.

பன்னூல்விரித்துரைக்கும் பாவலர்க்கும்பாருலகுந்
தொன்னூலென்றோதுஞ் சுருதிக்கு-நன்னூ
லுழைந்தோர்க்குமெச்சமையத் துள்ளார்க்குமீகை
விழைந்தோர்மீதாசை மிகும். (க)

தவிடளவுநல்கறியாச் சண்டாளன்றானும்
புவியினரோடீகைதனைப் போற்றுங்-கவிஞருட்
னீவோருஞ்சாகா திருப்பதனையாரறியார்
சாவோர்கொடுக்கறியா தார். (உ)

ஈகைநலந்தேரா ரொத்தகையோரானலுஞ்
சோகையனைய தொடக்கர்தா-மாகையினு
லொவ்வாச்சமைய முளவெல்லாமொன்றுபோற்
செவ்வாகுமென்றிசைந்த தே. (ங)

ஈவதேமெய்ப்புகழ்க்கு மின்பத்தினுக்குமொப்ப
யாவர்மொழியு மெவற்றிற்குந்-தாவரமாம்
போக்கும்வரவும் பொருந்தாதமுத்திக்குந்
தேக்குந்தமிழ்க்கடற்குஞ் சீர். (ச)

தெய்வமெனுமொன்று சேண்முதலாமைம்பூதஞ்
செய்வதுவுமீகைச் சிறப்பன்றோ-வுய்வ
தறியாதமூடர்க் கதன்பெருமைதோன்றா
நெறியார்க்குத்தோன்று நிசம். (ரு)

பெரும்பான்மையுந்துறந்த பெற்றியோர்தாமு
மரும்பாவலிமைபெற் றுள்ளாருந்-தரும்பாழிச்
செங்கைமலரிலன்பு சேர்ப்பதுண்டாற்றேடிநல்கு
மங்கையழகி லழகாம். (சா)

கேட்டுங்கொடாதிருக்குங்கீழ்க்கரமுங்கேட்டுநல்குந்
தாட்டுக்கரமுஞ் சரியாகுற்-பாட்டுட்
சுவையறியாப்புன்கவிஞர் தோற்றத்திற்சொல்லாற்
சவைகுலுங்கும் வாணர்சரி. (எ)

நன்மார்க்கமுத்திக்கா நாடனைத்தும்விட்டோர்க்கு
ந், துன்மார்க்கப்பொய்மைத் துறவோர்க்குஞ் - சன்
மார்க்க, நல்லார்கைப் பிச்சையன்றி நற்றுணைவேறி
ல்லையெனக், கல்லாருமொப்பக் கடன். (அ)

கொண்மூமழைநீர் குறைவுபட்டாற்கூறடங்கா
விண்மூலந்தானும் வெதும்புமான்-மண்மூலத்
துள்ளார்க ளெவ்வண்ண முய்வாரொன் றோர்ந்திருப்
போர், தள்ளார்களீகை தனே. (கூ)

பத்தருக்குமாதவமே பண்ணும்பெரியோர்க்குந்
தத்தம்விருப்பநல்குந் தன்மையா-வித்தறையில்
வல்லோர்பலருமொருவத்துவுண்டென்றேதலுற்று
ரல்லோவுணர்வா ரவர். (ய)

---

## அ-வது, ஊக்கமுடைமை.

ஆக்கமுடைமை யருளுடைமையன்னவற்று
ளூக்கமுடைமை யுயர்வாகுந்-தாக்கவருந்
தானையைக்கண்டஞ்சாமற் றக்கவன்போனின்றதட்
டிற், கோனையஞ்சிப் பார்க்கினும் பார்க்கும். (க)

உள்ளக்கமலநடு வூக்கம்வைத்துப்பேணுதான்
வெள்ளப்பொன்பெற்றிடினும் வீணேபோ-மெள்ள
ஊனத்தா, மூக்கமுடையாற் குணவோடணைவுந்தாற்
போக்கரிதாநட்டும் புகழ். (உ)

வீரருக்கும்வேந்தருக்கும் வித்தகர்க்கும் விற்றமு
தற், காரருக்குங்காமுகர்க்குங் கள்வருக்குந்-தீரமெ
னு, மூக்கமேதஞ்சமென்ப தோர்ந்ததனைப்பற்றிநிற்
போர்க், காக்கமொடுகீர்த்தியுமுண் டாம். (௩)

ஊக்கமுடனிரப்போ னேட்டுணைவைமற்றொருவன்
வாக்கதனாற்கேட்டால் வழங்குமே - சேக்கனகக்
குன்றுடையானேனுமனக் கோழையென்றாற்கொள்
ளுமட்டுந், தின்றுமிரானவான் றினம். (௪)

கருப்பத்திருந்துமுற்றிக் காசினியிற்றோன்ற
வுருப்படுத்தினுதவு மூக்கம்-பொருப்பளவு
பெற்றோரோயெய்தரிய பேறுபெறநாடிநிற்பார்
மற்றோரிகழ்வார் மறுத்து. (௫)

எய்தரியமெய்ப்பே றிசைந்தாலுமூக்கமில்லார்
செய்தலறிந்துசெய்யார் சேர்ந்துள்ளார்-பொய்தவிர்
சீர், கைவருமுன்பெற்றியற்றுங் காரியங்கணுடிமன
னைவரதற்கீதே நலம். (௬)

ஊக்கமிலரா வுணர்வுடையராகிநிற்கு
மாக்களுக்குமெய்ப்புகழ்ச்சி வாராதே-யாக்கமற்ற
புன்முகத்துமானார்பாற் பொற்புமுலையுற்றாலும்
பன்முகத்துநாட்டம் படா. (௭)

ஆனையினூக்க மரியிடத்திலஞ்சுமது
பூனையொக்குஞ்சிம்புள் புறப்பட்டாற்-சேனை
மனுவேண்டுஞ்சிற்றரசர் வன்கோல்சொரியுந்
தனுவேந்தர்க்கஞ்சிநிற்பார் தாம். (அ)

பெருங்காரியம்விரும்பும் பெற்றிபெரியோன்
வருங்காதல்பற்றிநிற்கு மாட்சி-சுருங்காத
கோகனகச்செங்கைபெறுங் கொற்றமொக்குமற்றெ
வைக்குஞ், சோகமற்றவூக்கந்துணை. (கூ)

வேளாண்மைவாணிபம்போர் மிக்குணர்தன்மெய்த்
தவமாந், தாளாண்மையைந்துந் தருமூக்க-மீளா
நலத்தாற்றுறந்தவர்க்கு நால்வகையாத்தோன்றுங்
குலத்தார்க்குநல்லபற்றுக் கோல். (ய)



## கூ-வது, நன்றியறிதல்.

நன்றியறிந்து நடப்போர்க்கேநன்றெய்து
மன்றியொருவர்க் கமையாது-வென்றிமிகு
மன்னரோவாழ்வார் மனதறிந்தவஞ்சகத்தோ
ரென்னபட்டும்வாழ்வதில்லையே. (க)

ஆணைகிளிபரத்தை யாய்புலவரற்றூர்போல்
வானையொக்குநன்றி மறவாரோ-தேனைநிகர்
சொல்லாண்மணந்துயருந் தோற்றத்தாராகியன்பி
னல்லாரொன்றேங்கு நரர். (உ)

உபகாரஞ்செய்யு மொருவனுக்குமற்றே
னபகாரநாடி லறிவே - விபகாரம்
பாராட்டிப்புண்படுத்தும்பாங்குணரும்பண்புடையா
ர், சீராட்டுமுண்மைத் திரு. (ங)

நெஞ்சகத்தினன்றி நினைவிருக்கவாயளவில்
வஞ்சகமாப்பேசுதலு மாண்பன்றே-மிஞ்சறிவாற்
றுயென்றுளன்பு தழைத்திருக்கப்பொய்ச்சரசம்
பேயென்றும் பேசல்பிழை. (ச)

கொன்றியாயாவூனருந்துங் கொள்கையோர்தம்மின
த்து, நன்றிமறந்த நரர்பொல்லார்-பொன்றிடலிற்
பொல்லாதுவெங்நோய் புணர்முலையிற்பொல்லாதே
பல்லார்விரும்பும் பணம். (ரு)

கண்ணுஞ்செவியுங் கருத்துங்கொடுத்தநன்றி
யெண்ணுநலஞ்சிறிது மில்லார்பால்-விண்ணும்
வளியுங்கனலுமம்பு மண்ணும்படைத்தோ
னளியும்பொருந்தா தம்மா. (சு)

வென்றிமிகுந்தொன்னூல் விரித்தவற்றுளெல்லாமு
நன்றியறித னலமாகுங்-குன்றினங்கள்
கொள்ளத்திகழுங் குலவளத்துட்குன்றுத
வெள்ளருவிச்சீருயர்வா மே. (எ)

நன்றியறியு நரனிடத்திற்சேராத
தென்றிலங்குநன்மையெங்கு மில்லையே-மின்றிகழும்
வேலார்நெடுந்தோள்விறல் வேந்தனேவல்செய்தற்
கேலாருலகத் தில. (அ)

பொய்யுணர்ச்சியத்தனையும் போக்கிப்புகழ்விளக்கு
மெய்யுணர்ச்சிகொண்டுநிற்கும் விற்பனரோ-செய்யுந
ன்றி, கண்டுகளித்துக் கவலைப்படாதொருவன்
றெண்டுபெற்றித்தோய்வார் சுகம். (கூ)

வென்றிபெறுஞ்சிங்கநிகர் மேன்மையுடையாரோ
நன்றியறிதன்மட்டி னுயாவார்-பன்றிநிகர்
தீயார்மறந்திகழ்ந்து செப்பரியபாழ்நரகிற்
போயாழ்வரொன்னும் புவி. (ய)

——oo※oo——

## ய-வது, வாழ்க்கைச்சிறப்பு.

சுற்றத்தினர்க்குந் துயர்சேர்மிடியினர்க்கும்
பற்றற்றவர்க்கும் பகிர்ந்துண்டு-கற்றவராற்
காரியாகாரியங்கள் கண்டியற்றிக்காமுறுதல்
சீரியார்வாழ்க்கைச் சிறப்பு. (க)

இரக்கமுடனிகை யீனத்தொழிலா
லரக்கரனையாருக் கஞ்சல்-குரக்குறமூ
மானுரைச்சற்று மருவாமையிம்மூன்று
மானுதவாழ்விற் கணி. (உ)

கற்றோருறவுங் கடவுளேதஞ்சமெனப்
பெற்றோர்மனக்களிப்பும்பேதமையான்-மற்றோர்தோ
ள், சேராமனைத்தொடர்புந் தீமைசெய்யாப்புத்திரனு
ஞ், சேராதவாழ்வின் றுணை. (ங)

கள்ளுண்பார்தம்முறவுங் காமுகர்தம்பாமூறவுந்
தள்ளுண்டபுன்குலத்தோர் தம்முறவு-மெள்ளுண்
முளையளவுநல்கறியா மூடருறவும்
விளையவொட்டார் வாழ்வேமிகும். (ச)

மன்னவனுக்கஞ்சன் மனைவிக்கடங்காமை
தன்னவனையப்புறத்திற் றள்ளாமை-யின்னல்
வரினுந்தளராமை வஞ்சமின்மைவாழ்விற்
பெரியனென்கை வேட்போன்பெறல். (௫)

கரும்பைத்தொடினுமது கைப்பாகுங்கையு
மிரும்பனையநெஞ்சு மெளியோர்-வரும்போது
செந்நிறமாங்கண்ணுஞ் சிறியார்தொடர்புமுள்ளார்க்
கந்நியமோ வாழ்வுள்ளவர். (௬)

தாழ்வுவரினுந் தயங்காமற்றுமருந்துங்
கூழ்பகிருந்தன்மையரோ குன்றாத-வாழ்வுடைவா
ரல்லாக்கயவரளவிறந்த பொன்பெறினு
மெல்லாமிழந்தழிவா ரோ. (௭)

வாரியுடைப்பார்முழுதாண் மன்னவனுமூனருந்தாச்
சீரிசைந்தகோத்திரத்துச் செல்வனுநற்-பாரியொடு
மக்களுடையானும் வண்டமிழ்நூற்பாவலனு
மிக்கதென்னுநல்வாழ்வினர். (௮)

பல்லுண்டமூந்தனதாப் பத்திநிலைகொண்டுபெற்று
நல்லன்பனென்றபுகழ் நாட்டிடுவ-தில்லறத்தோர்க்
காகாதுகொல்லோ வறங்களெல்லாம்பெற்றதன்றோ
சாகாப்புகழ்தான் றவம். (௯)

வந்தவிதிப்பயனுல் வாழ்வுமிகப்பெற்ருலு
மந்தமட்டிற்கீர்த்தி யமைவரிதே-கொந்தளக
நல்லார்க்கெழின்மிகுதி நண்ணிடினுங்கற்பென்னும்
வல்லாண்மைதாங்கரிதா மாம். (ம)



துறவறவியல்பு.

## க-வது, துறவாக்கம்.

உண்டென்றிலையென் றொருகோடிவாதமிட்டுந்
தொண்டென்றுகூட்டமிட்டுந் தூமமிட்டும்-பண்டெ
ன்று, கூப்பிட்டும்பல்சமையங் கொண்டாடுந் தேவு
மெல்லாஞ், சாப்பிட்டுகின்ற தனி. (க)

பல்லுடுவினுப்பண் பனிக்கதிரோன்போலுமே
யில்லுடையார்போற்று மிகல்வேந்த-னெல்லுதவும்
வெய்யோனைப்போல விளங்குமேமெய்யுணர்ந்து
பொய்யோடவிட்டோன் புகழ். (உ)

தெய்வந்தனிமையென்று தேர்ந்துதிரும்பாம
லுய்வதேநாடி யுருகுவோ-ாவருக்கா
ளாகார்துறவே யவர்க்கழகென்ருரணங்க
ளேகாந்தத்தோத லுண்டுமே. (ஈ)

விருகங்கள்போன்மனுவு மேயநாட்டோன்றிச்
சுருதிகளும்வார்த்தைகளுஞ் சொன்ன-குருவென்ற
முன்னோன்றனியனென்றான் மோசமில்லை வேறுனை
த்தா, லென்னோவிளையு மிகல். (௪)

ஏகனொருவனே யாவருக்குந்தஞ்சமெனச்
சோகமொழிக்குந் துறவோரை-யாகரத்தாற்
பேராற்பிதற்றிப் பிணங்குஞ்சமையத்தோ
ராராயினுமிகழா ராம். (௫)

உண்மைத்துறவோ ருலகத்துத்தெய்வமென்னும்
வண்மைக்கிசையா மனுவில்லைத்-திண்மைக்
கயம்போன்றநெஞ்சினவர் காரணத்தார்தாமென்
றியம்பாதநூலு மிலை. (௬)

எவ்விடமு மெப்பொருளு மியாருமுடையானடி
யார்க், கிவ்விடமுமிப்பொருளு மின்னாரும் - வெள
விடற்கா, மென்றுகொள்ள லாகாதென் றில்லறத்தை
நீத்தவல்லோர், கொன்றுகொள்ளாரொன்கை முன்னூ
ற்கோள். (எ)

மன்னவற்குமஞ்சா மனவலியுமாதவமு
முன்னவனைச்சுட்டு மொழிப்பெருக்கு - மின்னலுறு
மெய்ப்பேறுநல்லுணர்வு மேவுந்துறவோர்க்கே
பொய்ப்பேறுவேண்டாப்புகழ். (அ)

பொன்னுமெனச்சுணங்கு பூத்தமுலைப்போர்புரியு
மின்னறிற்கற்புடையார் மேலாகும்-பன்னும
மொய்த்துடையதேவே முதன்மையெனத் தேர்ந்
தோரின், மெய்த்துறவுபெற்றுடையார் மேல். (௬)

பாடுமிகுங்கல்விப் பயனுர்துறவுகொள்ளார்
வீடுதவுமெஞ்ஞான மேவிடினுங்-கோடுங்
கடியார்மதப்புனலுங் கண்சிவப்புங்காட்டாப்
பிடியார்புகர்ப்பொறிக் கொப்பே. (௭)

---

## உ-வது, விரத்தியிலக்கணம்.

முன்னூழ்த்தொடர்பான் முதல்வனருட்சீராற்
றுன்னூலுணர்ச்சியாற் றோன்றுமே-மன்னூசம்
பெற்றோர்துறந்து பெருந்தவஞ்செய்தானந்த
முற்றோரேயென்னு முரம். (௧)

பல்வாறுதோன்றிப் பழுத்தவிரத்திபற்றிச்
செல்வார்துறவே திறமாகு-மல்வாய்ந்த
தோள்வேந்தன்மானமுதற்சொல்வனவாற்சென்றுலு
மீள்வோரல்லாதவரோன் மேல். (௨)

நாடகத்தில்வேண்டு நரனிற்கொடியானே
தேடரியதாந்துறவிற் சென்றிழந்தோ-னூடப்
பணங்கொடுத்தாலன்னவனப் பாங்குறுவானின்னே
னிணங்கவிடத்தக்கதில்லை யே. (ந)

சென்றுதிரும்புந் திருட்டுத்துறவியுட
லென்றுநிலையென் றிருப்பானே-குன்றுறழுங்
கொங்கைத்தினவாற் குலமிழக்குங் கோதையெழின்
மங்கையுண்டென்றெண்ண லுண்டுமா. (சு)

மெய்த்துறவோ ரில்லறத்தின் மேவினரைச் சேயி லெண்ணிப், பொய்த்துறவைப்பெற்றதையும் போக்கினரைக் - கைத்துமனப், பித்துடைய பேயிலெண்ணிப் பிச்சையெடுத் துண்டுபர, வத்துடைய தாகிய தாவார். (ரு)

திரும்பாமையெண்ணித் தெளியும்விரத்தி
யரும்பாந்துறவு மலராகும்-பெரும்பான்மை
வேண்டல்பிஞ்சாங்காயாம் விருப்பும்வெறுப்புமற
னீண்டகளிப்பேகனி. (சா)

இல்லறத்தை விட்டொருவ னேற்றருந்து மோடு கொண்டா, னல்லறத்தோர்சற்று நகையாரோ-வல்ல றத்தை, விட்டொருவன் மெல்லறத்தின் மேவினெவி யாவருங்கை, கொட்டிநகைப்பார்முற் கோள். (எ)

மெய்த்தவத்தோர்க்கன்றி விரத்தியுதியாது
பொய்த்தவத்தோர்க்குண்டாம் பொருளாசை-யத்த
மிக, வேண்டுநரும் பெண்டுபிள்ளை விட்டொருதே
யம்புகுத, லீண்டுபழ வழக்காமே. (அ)

பொன்னைமடவாரைப் பூமியைப்பொய் யென்று
ணரான், றன்னைவெறுக்குந் தருமமா-முன்னைத்
துறவினடியாம்விரத்தி தோய்வானேதோய்ந்தா
லறவினைக்காமாண்மை செய்திடான். (கூ)

வேதங்கள்கோடி வெகுளிகொண்டுபோர்புரியு
நீதங்கள்கொண்டு நிறைந்தவொன்றின்-பாதங்க
ளன்றியெல்லாம் பொய்யென் றறிந்தோர் விரத்தியெ
ன்னு, மொன்றின்பயனே யுயர்வு. (ய)

---

## ந-வது, திருவேடச்சிறப்பு.

கருவேலைநீந்தும்வண்ணங் காதலித்தோர்க்கெல்லாந்
திருவேடங்கொள்ளல் சிறப்பா-முருவேதஞ்
சேராமற்செய்வோன் றிருவருளாலன்றியது
வாராதென்றோதல் வழக்கு. (க)

பெரியதிருவேடம் பேணிக்கொள்ளாதா
னரியதுறவடையு மாக்க-மரிவுபட்ட
மூக்குஞ்செவியுமுள்ளான் முற்றிழையும்பொற்புமு
ள்ளாள், பாக்குமுலைதோய்ந்த பரிசு. (உ)

பொய்யன்றிருவேடம் பூண்டாலும்பூதலத்தோர்
மெய்யனெனவே விழைதலால்-வையமய
லற்றுமருன்போலவிர்வானுக்கன்புகொண்டு
சற்றுமதித்திறைஞ்சார் தாம். (ங)

முத்தியடையு முனிவோர்திருவேடம்
பத்தியொடுமோதவமும் பாலிக்கும்-சித்திதரு
மாறுசுவையோ டமுதளிக்குமானந்தப்
பேறுதவுமென்றே பெறல். (ச)

பேதாதிபேதம் பிறங்குஞ்சமயமெல்லா
மாதாவினல்லான் மலர்ப்பதமே-மீதாமென்
றுயபொருண்மற்றனைத்து மற்றுருக்காவதென்றோர்
தூயதிருவேடஞ் சொலல். (ரு)

காலனிகர்கண்ணுடையாள் காளைமனங்கொள்வ
தற்கும், கோலமிசைந்தாற் குணமாமான்-மூலபர
மானனருட்பேற்றுக் காசைகொண்டோர்க்காதரவா
மேனாட்டிரு வேடமே. (சா)

திருவேடமாமவற்றுட் செங்காவித்தானே
பெருவேடமற்றனைத்தும் பேதங்-குருவேட
மாவதுதேவென்னு வழிசமையத்தாழ்ந்துழலுஞ்
சீவர்களுமொப் புவததே. (எ)

கொல்லாதுநல்லுணவே கொள்வோர்திருவேடம்
பொல்லாதவென்றிகழப் போகாதே-யெல்லாரு
மொப்பாவொருசமையத் துள்ளபொருளானலுந்
தப்பாமென்றெள்ளார் தவர். (அ)

ஒவ்வோர்சமைய முடையதிருவேடஞ்
செவ்வோவெனக்கேட்கிற் றேர்ந்துள்ளார் - தெவ்
வோர்க்குந், தங்கடவுளாமவனே தஞ்சமெனுஞ்சத்
தியத்தோர்க், கிங்கழகாமென் றுரைப்பாரோ. (கூ)

இல்லந்துறந்திரந்துண் டெம்பிரான்றன்புகழே
சொல்லன்புகொண்டு தொழுமேலோர்-நல்ல
திருவேடம்பூண்டிருந்தாற் செம்பொன்மலரின்
மருவேய்ந்திருப்பதொப்பா மாம். (ω)



## ச-வது, பிச்சைப்பெருமை.

எல்லாமொருவனதே யென்றுணர்ந்துபோற்றிசெ
ய்யும், வல்லார்க்கேயேற்றருந்தன் மாட்சியா-மல்லா
தார், பொல்லாமிடிக்கனலாற் பொன்றலஞ்சியேற்றி
டினு, மில்லாமையெண்ணி னைவாரோ. (க)

இச்சையறுத்தாளு மெம்பிரானன்பருக்குப்
பிச்சையெடுத்துண்கை பெருமையே-கொச்சைமொ
ழி, தோயாதபாவலர்க்குச் சொற்சுவைதேர்ந் துள்ள
வர்பால், வாயாரக்கேட்டல் வழக்கு. (உ)

வீடுதொறுஞ்சென்றிரந்த வெண்சோற்றுல்வெம்
பசிநோ, யோடுவதுகண்டுளங் குளிர்ந்து-கூடுமுலைத்,
தையலார் தம்மையெல்லாந் தாயாகக் காண்பவரோ,
மையலானையாதவர். (ங)

ஏற்றருந்தவல்லா ரிறைவன்புதல்வரெனச்
சாற்றலிகழத் தகாததே-போற்றரிய
வல்லாண்மைதோயுமவன் மற்றெவையுந்தானுகி
யல்லாதுநின்ற பொருளால். (ச)

மன்னவன்றன்கோனிலையும் வையகத்தோர் வாழியல்பு, மன்னமிரந்துண்போ னறியலா-முன்னவர்சொல், வாய்ந்தபலநூலில் வண்மையதும்புன்மையது, மாய்ந்தகவி யறியலாம். (ரு)

இல்லந்துறந்து மிசைந்ததிருவேடமிட்டு
நல்லன்னமேற்றருந்த நாணுவோ-னெல்லவருங்
கட்கிசைந்தோனென்னுங் கணவன்பாற்காமமட்டில்
வெட்கிநிற்குமங்கை யொப்பாமே. (சு)

ஆகமுதன்மூன்று மருட்குரவற்கன்பினல்கிச்
சோகமெல்லாநீங்கத் துறந்தேற்போர்-பாகனைய
சொல்லார்களூடிற் றொழும்வேந்தர்க்கச்சமுற்று
நில்லார்முக்காலு நிசம். (எ)

ஈவோர்தமைப்போற்று ரில்லையென்பார்தம்மையெள்ளார், சாவோரைக்கண்டு தளர்வுறார்-பாவோதுஞ்
சீரியரைமற்றவரிற் சேரார்சிறிதுமஞ்சார்
பூரியரைத்தள்ளி யிரப்போர். (அ)

இல்லறத்தாரோற்கை யிழிவென்றுமேதமற்ற
வல்லறத்தாரோற்கை வழக்கென்று-நல்லறங்கள்
சொல்லும்பலவாஞ் சுருதியினுந்தோன்றல்கண்டு
புல்லுந்திரைநீர்ப் புவி. (கூ)

எத்தகையோர்தாமு மிறைவன்பாலேற்பவரா
லத்தகையைத்தீதென் றறைவாரியார்-மெய்த்தகைய
தாகுந்துறவுடையா னன்னமிரந்துண்டறிவிற்
போகுமுயர்வீட்டும் புகும். (ய)



# ரு-வது, திருக்கூட்டம்.

அண்டங்கள்கோடி யமைத்தபெருமானைக்
கண்டன்புசெய்யுங் கடவுளாந்-தொண்டரிங்கு
வந்தாற்றிருக்கூட்ட மாமகிழ்ச்சியாகுமன்றிச்
சிந்தாகுலமாஞ் சிதறி. (க)

பெம்மானருட்பெருக்கம் பெற்றதிருக்கூட்டத்திற்
சும்மாவிருக்குஞ் சுகமுண்டாந்-தம்மா
லுலகங்களுண்டாச்சென் றோதுநர்கூட்டத்திற்
கலகம்விளைதல் கரி. (உ)

கொல்லாத்திருக்கூட்டங் கூடிக்களிகூர்ந்தோ
ரல்லாதார்ஞான மடைவரிதே-யெல்லாருங்
கூடுஞ்சபையிலொரு கொண்கனைக்கைக் கொண்டா
ட்கே, நாடுஞ்சுரத நலம். (ஙு)

உண்மைத்திருக்கூட்ட முண்டாகிலோதரிய
வண்மையுலகின் மலியுமே-தண்மையொடு
வன்மையுடையார் மருட்கூட்டமுண்டாகிற்
புன்மைமிஞ்சுந்தன்மமஞ்சிப் போம். (௪)

செய்தற்கரிய செயலார்திருக்கூட்டத்
தெய்தப்பெறுந்துறவி யிங்குவரா-துய்தற்
கருதிக்கருதிக் கவலாமற்காண்பாள்
சுருதியுணராச் சுகம். (௫)

மெய்யடியாராமவரோ மேவுதிருக்கூட்டத்தாற்
பொய்யடியாருக்கும் புகழுண்டாம்-வெய்ய
விடப்பாம்புக்கூட்டத்தால் வேறுள்ளனவுந்
திடப்பான்மைநீங்கச் செயும். (௬)

சொல்விற்பனமுடையதொண்டர்திருக்கூட்டத்தாற்
கல்விப்பயனதனைக் காணலாம்-பல்வினையும்
போக்கலாமானந்த போகப்பொதுவிளைவுண்
டாக்கலாம்விடு பெறலாம். (௭)

பொய்ப்பொருளைப்போற்றும் புலைத்தொழிலோர் புன்னுவான், மெய்ப்பொருளொன் றில்லையென்று ல் வெல்லுமே-கைப்பொருளா, நல்வசனங் காத்து நவைதீ ரொழுக்கமுறுஞ், செல்வர் திருக்கூட்டச் செயல். (௮)

ஆனைக்குழுவி லரியேறனையமன்னன்
சேனைக்குமஞ்சாத் திறலோரே-வானை
யிறுகச்சமைத்த தெனவிளங்குமேலோன்
றறுகுதிருக்கூட்டத் தவர். (௯)

பொய்முத்திவேண்டியுழல் புன்மையோர்காணரிய
மெய்முத்திசேர்வோர் விருப்பெல்லாம்-வைமுற்றும்
வேலோரும்போற்ற விளங்கொருவற்சூழ்ந்துமகிழ்
மேலோர்திருக் கூட்டமே. (௰)

---

## ௬-வது, அருளாடல்.

பொருளாடற்கண்டுவக்கும் பூரியார்நெஞ்ச
மருளாடற்காணி னன்றியஞ்சா-திருளா
மிரவுபகலாதற் கென்செயினும்வெய்யோன்
வரவுபோலாகாதம் மா. (க)

தெருளாருநெஞ்சகத்துச் சீரியர்களல்லா
ரருளாடற்காண்பதில்லை யன்பர்-பொருளான
வல்லோனேசற்குருவா வந்துவிளையாடிடினும்
பொல்லோனெனப்புரிவார் போர். (உ)

ஒருமானிடனை யுறவுடையாரெல்லாம்
பெருமானென் றேத்தவைக்கும் பெட்பா - லுருமா
ர்த்தாற், போன்முழங்கும் பல்சமையம் பூமியிலுண்
டாக்கிநின்ற, மேன்முதலாமெய்யருளே மெய். (௩)

பொதுவாடல் செய்யுமொன்று புண்ணியத்தோ
டேனை, யதுசார்பாமாட லனைத்து-மெதுவேனு
மொன்ருற்புரிவ துளதென் றுணர்ந்தோனே
குன்ருவருளாடற் கோன். (௪)

அருளாண்மையின்றி யலையுந்துறவி
பொருளாளர்தம்பாற் புலம்பு-மருளானென்
றெள்ளப்பரதவிக்கு மேக்கமுறுமீடழியும்
விள்ளப்படாதுழலு மே. (௫)

எல்லாநலமு மிசையுந்திருவருளிற்
பொல்லார்மனக்குரங்கு போகாது-வல்லார்
மனமானமந்திசெல்லு மாயையிருளா
னமாறிக்கொம்பிழ வாதே. (௬)

கொம்பிழந்தமந்திகள் கூடாவொழுக்கத்தா
னம்பிச்சிறிது நலம்பெற்ருல்-வெம்பிப்
பகைசெய்வார்தங்குலத்துப் பாலர்பலர்சேர்
தொகையென்ருேர் துன்மதந்தோன் றும். (௭)

பூரியரோயானாலும் பொன்னுடையாராமாகி
லாரியருமஞ்சு மதிசயம்போற்-கூரியநூல்
வல்லானெனினுமொரு மந்திரசித்துள்ளான்பா
லுல்லாசங் குன்றலுமுண்டு. (அ)

மானிடராற்செய்யரிய வண்மையருளாட
லானியிலாச்செல்வ மதுதானே-மேனிலமு
மிந்நிலமும்யொய்யென் றிகழ்துறவிக்கேற்றமதே
யெந்நிலையிற் றோன்றினுநன்றே. (௬)

ஆரணங்கடாமு மருளாடலாமென்றூற்
காரணங்களெல்லாங் கடந்ததன்றோ-சீரணங்கள்
வாராமற்காக்கும் வலியதன்றோமாதவத்தோ
ராராயினு முணரலாம். (௰)



# எ-வது, பெருந்தன்மை.

முருந்தன்னபல்லார்முலைப் போகம்வேண்டாப்
பெருந்தன்மையேயுயர்ந்த பேறும்-விருந்தன்ன
மிட்டுண்டுவாழ்ந்தாலு மில்லறந்தீதியானுமுன்பு
தட்டுண்டேனென்பான் றனக்கு. (௧)

தேர்வேந்தர்வாழ்வுஞ் சிறிதென்றருவருத்துப்
பார்வேண்டுநன்மைசெய்யும் பத்தருக்குட்-சார்வோ
ன், குருந்தென்றுதம்மைக் குறிக்குங்குணமே
பெருந்தன்மையென்றுரைக்கும் பேறு. (உ)

வல்லானொருவன் மகவாமெனப்பிறங்கு
மெல்லாவுயிர்க்கு மிதஞ்செய்து-கொல்லா
விரதம்புலாலருந்தா மேன்மையருண்மூன்றுஞ்
சரதமெனக்காண்போன் றவன். (௩)

கூறற்கரிய கொடுங்கோலரசர்குல
நீறப்புரிந்து நெறிதாங்கும்-வீறணிந்த
செங்கோலார்வாழ்ந்துவக்கச் செய்துங்களிக்குநல
மங்கோலமாதவருக் காம். (௪)

முன்னவற்குக்கீழா முடிதாங்கிப்பார்புரக்கு
மன்னவற்குமேலாவோர் மாதவரோ-யன்னமிரந்
துண்பதெண்ணித்தாமே யுலகிற்குதவிசெய்யும்
பண்படைவார்மற்றோர் பதர். (௫)

உவமானமற்றபொரு ளொன்றுளதென்றோர்ந்து
தவமுயல்வதொப்பில் பெருந்தன்மை-கவலைமிகு
மற்றவர்போற்பொய்ப்பெயரில் வாஞ்சையுற்று வாத
மிட, லற்றவருக்காகாதது. (௬)

அறியாமைமுற்றியதா லாணவத்தின்மூழ்கிச்
சிறியார்பெருந்தீமை செய்யிற்-குறியான்
மனமடங்கிப்போத மயமாம்பெரியோ
ரினமடங்கலும்பார்த் திரா. (எ)

இரவுபகலற்றதல மித்தகைத்தென்றோர்ந்து
கரவுமுழுதுங் கழித்தோ-ரரவுநிகர்
பொல்லார்க்குநன்றியுணர் புண்ணியர்க்குமிவ்விரண்
டு, மில்லார்க்கு நல்லவராமே. (அ)

புன்குலமுமேற்குலமாம் பொய்ப்பொருளு மெய்ப்
பொருளாம், வன்குணமுநன்மை மலிகுணமா - நன்
குணராப், புல்லியனும்வண்மைப் புலவனும் பொய்
ப்பாச, வல்லியற்றோர்தம்பால் வரில். (கூ)

தெய்வத்தினுண்மை திகழ்வதற்குந்தோர்வேந்தர்
நைவற்றநீதி நடத்துதற்கு-மைவளர்க்கும்
பாருலகினன்மை படர்வதற்கும்பற்றொழிந்த
சீருடையார்சொல்லே திறன். (ய)



# அ-வது, சித்தாந்தப்பத்தி.

எல்லவர்க்குங்கோவா மிறைவனொருவனே
வல்லவனுமியாவுமுணர் வத்துவாஞ்-சொல்லரிய
பேதாதிபேதமெல்லாம் பெற்றதுவாமென்றுரைத்தற்
காதாரக்கேட்கை கடன். (௧)

வானம்பெயலு மதியிரவிதோன்றுதலுந்
தானந்தருமந் தழைப்பதுவு-மோனநிலை
யுண்டென்றுபன்னூ லுரைப்பதுவுமுன்னுநர்க்கே
தொண்டென்கைநல்ல தொழில். (௨)

கருப்பத்திருந்துமுற்றிக் காண்முளையாத்தோன்றிப்
பருப்பதநேர்கொங்கைப் பயமுண்-டிருப்பவைக்
கண்டுந்தாமந்நாட் கழித்ததறியாதிருந்தும்
பண்டுடையேமென்பார் பலர். (௩)

பத்திநிலையிற் பதியாதபாமரர்க்குச்
சித்தியொடுமுத்தி சிறிதுமில்லைக்-கத்திகொண்டு
வெட்டவரினுமொரு மெய்ப்பொருளுண்டென்பவ
ருக், கிட்டமுற்று மெய்துவதுண்டே. (௪)

சாகப்பயந்து தடுமாறுந்தன்மைக்கு
மோகக்களைகளையு முன்னவற்குத்-தேகமுதன்
மூன்றுங்கொடுக்கு முரணூர்ந்தபத்திக்குந்
தோன்றுமலகில்லாத் தொலை. (ரு)

தெய்வமுலகைத் தெரியாதபாழென்று
லுய்வதென்றொன்றில்லையுயர்வில்லைச்-செய்வதனுட்
புண்ணியபாவங்களில்லைப் போர்வேந்தும்பொன்னு
மெய்யென், றெண்ணியவர் தம்மையெள்ளோ மே.

முத்தியடைந்த முனிவோர்பலருக்கும்
பத்திதுணையான பண்புணர்ந்து-சித்தி
வழியாகச்சேரவெண்ணி வாடாத்துறவோர்க்
கழியாகக்கொண்ட துலகம். (எ)

ஆலயத்திலன்புசெய்தா லவ்வச்சமையத்துச்
சீலமிகுதெய்வத்தின் றேட்டமுண்டாஞ்-சால
வருந்தியுழைத்தான் மனம்போல்வடிவம்
பொருந்திவருமொன்றிலன்பு போம். (அ)

அருவுருவென்றேது மகண்டகண்டமாகு
மொருவனேயெச்சமையத் தோர்க்கும்-பருவமறிந்
தின்பங்கொடுப்பா னெனவுணராரோய்ந்தபத்தி
துன்பந்தருவதுண்மைச் சொல். (கூ)

கொன்றுபுலவருந்தாக் கூர்ப்புடையபத்தரவை
துன்றுநாயெள்வரவர் சொந்தமென-நின்று
விளையாடுந்தெய்வமொன்று வேறுளதென்றெள்ளார்
களையாமவரிகழ்வார் கள். (௰)

# ௯-வது, வேதாந்தத்தவம்.

எந்தையெனவே யெவரும்பரவுமொன்று
மந்தையினிற்கற்றூணை மானுமே-சிந்தை
யடங்கத்தவம்புரியு மற்றூர்க்கறிவே
தடங்கலறத்தோன்றியன்ன தாம். (௧)

தவம்புரியச்சோம்பிச் சமையத்தொடர்பா
லவம்புரிந்துநாட்கழிக்க லாகா-நவம்பெரிது
செய்வதுபெற்றென்றுந் திரும்பாதமெய்வீட்டி
லெய்வதுவேட் டுள்ளதுறவி. (௨)

மெய்த்தவத்தாலன்றி வினையொழியமாட்டாதாற்
கைத்தலுறுந்துன்பக் களஞ்சியமா-வைத்தவொரு
பொய்யறத்தைநீக்கிப்பொறியுடையபுண்ணியத்தோ
ணாயமெடுத்துண்பா ரமைந்து. (௩)

சற்குருவைநாடித் தவம்புரியுந்தன்மையின்றிச்
சொற்குரவன்சொல்லாற் றுயர்ப்பட்டுக் - கற்குவடு
போலுமனத்தார் புறங்கடையிற்போயிரப்போர்
பாலும்வருமோ பயன். (௪)

சோராத்தவமே தொழிலென்றதுபுரிவோர்ச்
சேராத்துறவோன் சிறப்பெல்லாங் - காராழி
நீந்திடற்குமஞ்சா நெடுந்தோளாற்சேர்ந்தறியா
வேந்திழையாள்கொள்ளு மெழில். (௫)

உண்மைத்தவமா மொருமாதைச்சேர்ந்தார்க்கு
வண்மைமிகுஞ்சித்தே மகவாகுந்-திண்மைபெறுந்
தொண்டர்குழாமத்தனையுஞ் சுற்றமாஞ்சொற்சுவை
ச்சீர், கொண்டவர்வாய்வாழுங் குடி. (௬)

பொன்கொண்டுவாழும் புரவலர்க்கும்போர்வேலா
மின்கொண்டமேகநிகர் வீரருக்குந்-தன்கொண்க
னன்றிமருவா ளனையதொருமாதவன்பால்
வென்றிகுன்றி யச்சமுண்டாமே. (௭)

பத்தியெனுங்காய் பழுத்துத்தவமாமென்
றுத்தியுடையா ருணர்வரான்-முத்தியே
வித்தாகுநல்லவிருட்சங்குருவேராம்
வத்தாமெனச்சொல் வது. (௮)

தன்னையிழந்து தவம்புரிவோர்தற்பரமாம்
பொன்னையுணர்ந்தன்பிற் பூசிப்பார்-முன்னைக்
குரவன்பணிபுனலாங் கோதிலுபதேசம்
விரவுங்கடிமலரா மே. (கூ)

கண்ணுளர்பொன்னூற் கலன்பலவாறுற்றலெனப்
பெண்ணுணைவென்ற பெருந்தவத்தோர்-விண்ணுகி
யெங்குநிறைந்தவொன்று லெண்ணிறந்தகோடிதெ
ய்வம், பங்குபங்காச்செய்வார் பரிந்து. (ய)



# ய-வது, சமரசநிச்சயம்.

சித்தென்னிற்சித்தாத் திகழுஞ்செயலிறந்த
வத்தென்றுநாடிலந்த வாறுகு-முத்தென்ற
பல்லார்முலேமயக்கிற் பட்டுழலாப்பண்புடைய
வல்லார்விரும்பு வது. (க)

எய்தற்கரிதென் றியம்புந்தனிவீடுஞ்
செய்தற்கரிய செயற்பெருக்கும்-பொய்தவிர்ந்த
மந்திரமுந்தம்மில் வலியார்வணக்கமுநற்
றந்திரமுந்தள்ளாச் சமம். (உ)

உருவம்பரமென் றுரைப்பாருந்தோன்று
வருவம்பர மென்பவருங்-குருவன்றி
யுய்ந்துகொள்ளமாட்டாத வுண்மைகண்டுநாடிமன
நைந்துமெலிகை நலம். (௩)

மற்றைச்சமையத்தோர் வாழ்தல்கண்டுந்தஞ்சமைய
மொற்றைக்குயர்ச்சி யுரைப்போரி-லெற்றைக்கு
முள்ளபொருள்சித்தோ வுரையிறந்தசூனியமோ
வின்னறியேமென்றுரைப்பார் மேல். (௪)

மழையுங்கதிர்மதியும் வான்பொருளைச்சித்தா
விழையும்படிபுரியும் வேந்தும்-பிழைமுதிர்ந்த
பொய்ச்சமையத்துள்ளாரும்பொன்னுமதுசூனியமெ
ன், றச்சமறுக்குந்தெளிவா ரார். (௫)

ஐந்துதொழிற்கண் டகங்குளிர்ந்துபோற்றுதலுஞ்
சிந்துமனத்தைக்குறியிற்சேர்த்திட லும்-வந்ததென்று
லாக்கமெல்லாங்கைக்கு ளமையுமென்கையாய்புலவர்
பாக்களுரைக்கும் பயன். (௬)

அருளுடைமைகொல்லாமை யார்வதறிகை
தெருளுடைமைவல்லானைச் சேர்கை-பொருளுடை-
மைக், கேங்காமையன்னநல மெத்தவர்க்கும்பத்தரு
க்கும், பாங்காமென்றோர்தல் பளு. (௭)

சாற்றரியவண்மைச் சமரசத்திற்சார்ந்தோரே
யேற்றமவருக் கிகலில்லைக்-கூற்றனிகர்
துன்பமில்லையாவருக்குஞ் சொந்தமெனநின்றுபெரி
தின்பநுகர்ந்துய்ந்துகொள்வா ரே. (அ)

பத்தரொடுமாதவரும் பாருலகின்மெத்தவுண்டு
சுத்தச்சமரசமாந் தொன்மைசேர்-வித்தகரைக்
காண்பதரிதாங் கவித்தொகையுமப்படியே
மாண்பகிலம்போற்று வது. (௯)

பலியாகவுந்துணிவோன் பத்தனுணர்விற்
சலியாதுநிற்போன் றவசி-மெலியாம
லிவ்விரண்டுஞ்சம்மதமென்றேற்போன்சமரசத்தோ
ன், செவ்விரண்டுஞ்சேரநிற்ப தே. (௰)

---

தண்டமிழோர்கொண்டாடுந் தண்டபாணிப்புலவன்
விண்டதிருவெண்பா மேதினியிற்-றெண்ட
ரொவர்க்குநலமா மிரக்கமின்றிக்கொன்றுண்
பவர்க்குமட்டுமாகா தது.

திருவெண்பா – முற்றிற்று.

ஆ செய்யுள்-உ௱௰உ.

---

தெய்வமே துணை.





குருவே துணை.

# நான்காவது விற்பனம்.



காப்பு.

தற்பரமேயாகிநின்ற சற்குருவின்றண்ணருளால்
விற்பனமென்ருேர் நூல் விளம்புதற்குக்-கற்பனைக
ளெல்லாங்கடந்தநல மின்னதெனத்தேர்ந்திருக்கும்
வல்லார்பதத்துகள்கா வல்.



## க-வது, கடவுள்வாழ்த்து.

குருவாம்வடிவையன்றிக் கும்பிடாவல்லோர்
திருவாகிநின்ற பொதுத்தெய்வம்-பெருவாய்மை
கோடாதநீதி குலக்கருணைகுற்றமின்மை
தாடாண்மையைந்துந் தரும். (க)

அருவென்பவர்க்கருவே யாகிநிற்குந்தெய்வ
முருவென்றுநாடிலவ்வா றெருக்குஞ்-சருவசித்து
முள்ளதடியார்க் குதவச்சலியாது
கள்ளமறுஞானக் கடல். (உ)

எந்தச்சமயத் திருக்குமியல்போர்க்குஞ்
சொந்தப்பொருளாத் துலங்குமே-யிந்தப்
புவிமுதலாமைந்துவகைப் பூதமுந்தானகி
யவிதலுறுதோங்கு மது. (௩)

மன்னரஞ்சிச்செங்கோல்வழுவாமலோச்சும்வண்ணந்
தன்னதெனமாரி தனைக்காட்டு-முன்னவற்குச்
செஞ்சுடரும்வெண்கதிருஞ்சீரருட்கண்போலுமென்
கை, விஞ்சுதமிழ்ப்பாவலர்க்காமே. (௪)

நூலமொடுசூக்குமத்துஞ் சொல்லவல்லார்சொல்ல
ரிதாச், சாலவும்பேதஞ் சமைத்தானைக்-காலபர
வாதிகட்குந்தோன்று மயமென்றுணர்ந்தோர்க்கே
நீதிமுற்றுங்காணு நிசம். (௫)

வாக்குமனத்தாலடங்கா வண்மையன்றுன்வந்தருள
நோக்கும்விருப்ப நுடங்காமற்-றுக்குநலம்
பெற்றேறொவரும் பெரியோனொன்றேது நன்னூல்
கற்றோர்க்கே மீளாக்கதி. (௬)

எல்லாமும்வல்லா னெதிர்தோன்றிக்காக்கும்வலி
யில்லானென்றேது மிழிவார்ந்த-பொல்லாரைக்
கொன்றுவிளையாடிக் குவலயமெல்லாம்புரக்குங்
குன்றுறழ்தோட்பெம்மான் குரு. (௭)

எல்லாமுந்தானு யிருந்ததனையாதொன்று
மல்லாததாகு மரும்பொருளைக்-கொல்லா
விரதத்தினுக்கிரங்கு மெய்யருளைவேண்டுஞ்
சரதத்தின்மேலோ தவம். (அ)

கூறுவதுகூறுங் குருவென்றுந்தெய்வமென்றும்
வேறுபடநாடி வினைப்பேயான்-மாறுபடுஞ்
சேட்டைச்சமையத் திருக்ககன்றசீரியர்சொற்
பாட்டையெல்லாஞ்சூடும் பரம். (கூ)

எண்ணில்கலையா வியம்பவல்லாரெல்லோரு
நண்ணியுரைத்து நடுநின்றோன்-புண்ணியச்சீர்க்
கிறுவந்ததில்லை யெனச்சலியாதேன்றமட்டுங்
கூறுவதேநல்ல குணம். (௰)

---

அறத்துப்பால்.

## உ-வது, இல்லறம்.

மெய்கொண்டசொல்லும் வியனார்ந்தபேரழகும்
பொய்கொண்டோர்தாமும்புகழ்கற்புங்-கைகொண்ட
தாராளமும்பொருந்துந் தையனல்லாட்சேர்ந்துடை
ய, சீராளன்வாழ்வே திறம். (க)

பொன்னுந்தனக்கினிய புத்திரரும்புந்திமிகு
மின்னுந்தமரும் விளைநிலமுந்-துன்னும்
பெரும்புகழுநல்லுணர்வும் பெற்றுமகிழ்சீர்
கரும்புறமுநெஞ்சினர்க்காகா. (௨)

பல்வேந்தரஞ்சப் படிமுழுதும்பார்த்தளிக்கு
நல்வேந்தனைக்குறித்து நாடுங்கால்-வல்வேங்கைக்
கூற்றனையவீரங் கொடைநீதியன்னவற்று
லேற்றமுறுமில்லறத்தானே. (௩)

பத்திகொண்டுநாடிப் பணிவார்தம்பாவனைபோன்
முத்தியுதவு முதற்பொருளைச்-சத்தியெனு
மாதருடைத்தேவனென்பார் வையகத்தில்வாழ்வத
னு, லேதமற்றதில்லறமாமே. (௪)

ஈகையுதார மிரக்கமிழிவின்மை
யோகைதருங்கல்வி யுறவுண்மை-சாகையற்ற
மெய்க்கீர்த்தியித்தனையு மேவநிற்குமில்லறத்தான்
பொய்க்கீர்த்திசற்றும் பொருன். (௫)

கல்வியுடையாரைக் காதலற்றமாதவரை
மல்விளக்குங்கொங்கை மடவாரை-நல்வினையே
செய்வோரைச்சற்றுஞ் சினவாதசிந்தைபற்றி
யுய்வோருக்கில்லறந்தீதோ. (௬)

கற்புடையமங்கையர்க்குங் காதலுடையார்போல்
விற்புருவங்கோட்டிநிற்கும் வேசியர்க்கு-மற்புரியும்
வீரருக்கும்வேந்தருக்கு மெய்யருக்கும்வீட்டறத்து
க், காரருளமஞ்சக் கடன். (எ)

பிறனில்லாட்சேராத பேராக்கந்தோய்வுற்
றறமுயன்றுநன்றி யறிந்து-மறமொழித்து
மானம்பெருக்கி மனைக்கடங்காவாழ்வுடையான்
வானம்போனிற்கு மகன். (அ)

கருந்தாதனையமனக் கள்வர்கயவ
ரருந்தாமைதேராவசடர்-பொருந்தாம
விட்டுண்டுவாழு மியல்புடையானில்லறமே
தட்டுண்டுபோகா தது. (கூ)

மாழைக்குவடு மணிக்குவையுமுள்ளானை
யேழையெனச்செய்வதுமில்லென்று-மூழை
மதியாமுயற்சிகொண்டு வாழ்வோன்வறுமைச்
சதியால்வருந்தா தவன். (௰)



## ௩-வது, துறவறம்.

சிறந்தவுறுப்பெண்ணுன்குஞ் சேரமனுவாப்
பிறந்தவருளெல்லாம் பெரியோர்-துறந்தருளே
தஞ்சமெனச்சந்ததமுந் தற்பரத்தைப்பற்றிநிற்கு
நெஞ்சமுளாரொன்கை நிசம். (௧)

துறவாதாரொம்பெருமான் ளுெண்டுபுரிந்து
பிறவாதமுத்தி பெறுஞ்சீர்-மறவாத
சீலமனைவியென்ஞேர் சித்திரத்தைச்சேருமவன்
சாலமகவினுந் தகை. (௨)

முற்றத்துறந்து முதற்பொருளேதஞ்சமென்ஞர்
கற்றவர்களேனுங் கடையரோ-பற்றறுத்து
வல்லானைப்போற்றி வணங்குமவரியாரோனு
நல்லாரோயென்பார் நமர். (௩)

நெட்டுயிர்ப்புக்கொட்டாவிநித்திரையாற்செத்துடலை
விட்டுவிட்டோர்க்கண்டிருந்து மெல்லியலைத்-தொட்
டு, மணம்புரிந்துநாட்கழிப்பான் வல்லோர்துறக்குங்
குணம்புகன்ஞற்றேர்ந்து கொளான். (௪)

கற்றோனொருவனுக்குங் காசகன்றபேரின்பம்
பெற்றோர்கொளுந்துறவிற் பேதமைநோ-யுற்றோரே
புல்லுமில்லநல்லதெனப் புந்தியினிற்றோற்றுவிக்குங்
கொல்லும்வினைப்பேய்க் குணம். (௫)

எவ்வுதவியார்செயினு மெம்பிரான்றன்னருளே
யிவ்வுதவிசெய்ததெனக் கொள்கை-தெவ்வு
முறவுந்தவிர்ந்தொருவ னுண்டென்றுணருந்
துறவுடையமேலோர் தொழில். (௬)

நாய்போலொருவர்பின்போய் நாரியைப்பார்த்துருகிப், பேய்போற்பறந்து பெரிதயர்ந்து-தீய்போற்
சினக்கின்றபொய்த்துறவுந் தீவினையோர்க்கெய்தா
தெனக்கண்டோர்வல்லோர்க ளே. (௭)

பற்றற்றதெய்வப் பழம்பொருளைப்பற்றுநர்க்கு
முற்றத்துறக்கை முறையாமென்-றுற்றவர்க்கே
மன்னருக்குமஞ்சா மனவலியுமாதவமுந்
துன்னருளுநீங்காத் துணை. (௮)

மன்னர்க்குலகோர் வணங்கல்போன்மாதவத்தான்
முன்னவனைக்கண்ட முனிவோரை-யன்னவர்தாம்
போற்றிப்பணியாரேற் போர்த்திறலும்பொன்முடியும்
வீற்றிருப்பும்பாழாகு மே. (௯)

காணரியஞானக் கடலிற்குளித்தருளைப்
பூணமுயலும் பொதுத்துறவோ-ராணவிபெண்
மூன்றுந்தானுகியன்பர் முன்னியவாறன்னவர்முற்
றேன்றுமொருதெய்வச் சுதர். (ய)

---

## ச-வது, பொதுவறம்.

கொல்லாவிரதமொடு கொன்றதனைத்தின்னுமை
யில்லார்மனுப்போன் றிருந்தாலு-நல்லார்
விழித்துணைக்குப்பொல்லா விருகமாத்தோன்றி
யழித்துருவவ்வாறுகொள்வா ராம். (க)

ஏன்றமட்டுமீத லிரங்கலிசைவேண்ட
லான்றமுதுநூ லறிதன்மை-வான்றனக்கு
மப்பாலிருந்தபொருட் கன்புசெய்தலாமிவையிங்
கெப்பான்மையோர்க்கு மிதம். (உ)

இல்லறத்தில்வாழ்ந்தாலு மேழையருக்காகாத
வல்லறமாமெய்த்துறவின் மன்னிடினுஞ்-சொல்லரிய
சத்தாவிளங்குஞ் சருவபரிபூரணத்தாற்
சித்தாடுவார்க்கே செயம். (ங)

புன்மைமுற்றும்போக்கிப் பொதுவினின்றுபுண்ணி
யஞ்சேர், நன்மைவிளைக்கு நரரெல்லாம்-வன்மை
யுடையார்களேனுமவ ருள்வதெல்லாநல்கிப்
படையாதுகாக்கும் பரம். (௪)

சத்தியமுஞ்சித்துந் தவமுந்தருமமுநற்
றுத்தியமுந்துய்ப்புந் தொலையாத-நித்தியனு
மன்னுஞ்சுடரிரண்டும் வானும்வளியுமண்ணும்
பொன்னும்பொறையும் பொது. (௫)

மூவாச்சுருதி மொழிதவறிச்செய்தாலும்
பாவாணர்தம்மைப் பகைத்தாலு-மேவார்
குடன்மாலைசூடும்வைவேற் கொற்றவன்றன்சொற்கீ
ழ்ப், படல்வேண்டுமோர்ந்தர் பலர். (௬)

தெய்வங்குரவன் றிருவேடத்தொண்டர்குழா
மைவனப்புக்கண்ணார் மகப்பேறு-மெய்வளமை
யச்சஞ்சுகதுக்க மாண்மையனையவற்றை
யெச்சமையமுந்தழுவு மே. (௭)

ஆருமறிதற் கரிதாகுமப்பொருட்கோர்
பேருரைப்போர்தம்பாற் பிணங்குவோர்-சீருஞ்
செயலும்பகர்காற் சிரமசைத்தற்றேர்ந்தான்
மயலகன்றஞானம் வரும். (௮)

மெஞ்ஞானமின்றி விருகம்போற்கொன்றருந்து
மஞ்ஞானத்தோர்தம் மகத்திடத்து-மெஞ்ஞான்று
முள்ளபொதுத்தெய்வமன்றி யோர்தேவுமில்லையெ
ன்பார், தள்ளரியஞானத்தவர். (௯)

பின்னும்பிறவாப் பெரியோர்க்கருளாண்மை
துன்னும்பொழுதிற் றுலங்குமே-மின்னுறமூழும்
பொய்ச்சமையமத்தனையும் பொய்யாம்பொதுவாய
மெய்ச்சமையஞான விழி. (௰)



பொருட்பால்.

# ௫-வது, செல்வப்பொருள்.

எங்கோன்கடவுளன்றி யில்லையென்னுமாதவர்க்குஞ்
செங்கோல்கொடுங்கோல்செலுத்துநர்க்கும் - பொங்
கோத, மன்னமனுக்கூட்ட மத்தனைக்குமாராயிற்
றுன்னரியபொன்னே துணை. (க)

தீண்டரியபுன்குலமுந் தீராதநோயுமுள்ளான்
மாண்டபெருஞ்செல்வனென்றுன்மங்கையரி-லாண்ட
கொழுநனன்றிக்கைகுவியார் கூட்டநிற்கமற்றக்
குழுமுழுதுமோகங் கொளும். (உ)

பொய்மதத்துத்தெய்வப் புகழெழுதும்பொற்காசை
மெய்மதத்தோர்தாமும் விழைவராற்-கைமருந்தாற்
செம்பிரும்புபொன்னாகச்செய்வோன்றிருக்குழைத்தா
னம்பிநிற்பார்கோடி நரர். (௩)

சித்தியிடத்தாசை சிறிதுமின்றிச்சேரரிய
முத்தியையேவேண்டு முனிவோர்க்கும்-பத்தியுள்ளா
ர், பொன்னாற்சமைத்தளிக்கும் போனகமேதஞ்சமெ
ன்றாற், பின்னாரதைவெறுக்கும்பேர். (௪)

புண்ணியமுஞ்சாகாப் புகழும்பொருத்தியிங்கு
நண்ணியவாறோங்க நடத்துமே-வெண்ணிலவிற்
சேர்த்தார்தமைக்குளிர்ந்து சேராரைச்செஞ்சுடரிற்
பார்த்தாயச்செய்யும் பணம். (௫)

அற்றாரையன்றி யரசர்முதலாகு
மற்றாருநன்கு மதிப்பாரோ-கற்றா
ரினந்தேடிமெய்ப்புகழீந் தேற்பாரோயிங்கு
தனந்தேடிவாழ்வோர் தமை. (௬)

சற்றுமுதவான் றறுகண்ணன்றாழ்குலத்தான்
பெற்றுவளர்த்தாரைப் பேணாதான்-சுற்று
முறவினரோடுண்ணா னுணர்வில்லானேனும்
பிறரிகழார்செம்பொன் பெறில். (௭)

முக்குற்றமுங்கடிந்த மோனிகட்குங்கோதுனைத்து
நக்குத்திரிவோரு நானிலத்திற்-செக்குறழும்
பொன்னுடையார்க்காணிலஞ்சிப் போற்றிப்பணிவ
ரென்கை, மன்னுமுதுநூல் வழக்கு. (அ)

போற்றிப்பொருள்விளைத்தார் புண்ணியங்கொண்ட
வ்வழியே, கூற்றிறந்தவீடுங்கொளலாமே-ஞற்றிசையி
லெய்தாநலஞ்சிறிது மில்லையாலேன்றதவஞ்
செய்தார்க்கேயெய்துந் திரு. (௯)

மண்ணிற்புதைபட்டான் மட்காதுவன்னியுலை
யுண்ணின்றுருகிலொளிமேலா-மெண்ணியெண்ணிப்
பார்ப்பார்க்குமின்பம் பயக்கும்பசும்பொன்னைச்
சேர்ப்பார்க்கேவண்மைச் செயல். (௰)

## ௯-வது, கல்விப்பொருள்.

கற்றோரிரந்தாலுங் கண்ணுடையார்காசினியின்
மற்றோர்கள்வாழ்ந்தாலும்வன்குருடர்-பொற்றோகை
யன்னமடநல்லாரு மாமென்பாராகையினு
லென்னசென்மங்கல்வி யிலார். (க)

செல்வமுதிர்ந்தாற் செருக்குண்டாந்தேடரிய
கல்விமுதிர்ந்தாற் கவியுண்டாம்-பல்விதத்தாற்
குன்றியழியுங் கொடுஞ்செருக்குப்பாமாலை
யென்றுமழியாத தே. (உ)

சுருதிமுடிவுணர்ந்த தூயோர்பொருளாற்
பெருமையுற்றோர்தம்மையன்பிற்பேசா-லொருபுலவற்
செத்தாலுமன்னோன் றெளிதமிழாற்சிந்தைசெய்வா
ரித்தாரணியறிந்த தே. (ந)

தமிழருமையென்றுரைக்குஞ் சாகரத்திற்றுமே
யமிழவல்லார்தம்மடிமை யாவா-ரிமிழ்திரைநீர்ப்
பாராளுமன்னர் படைக்கும்பயந்தடங்காச்
சீராளராய சிலர். (ச)

கற்றபுலவன் கதையொன்றியற்றிவைத்தான்
மற்றவர்மெய்யென்று மருள்வாரோ-குற்றமிகு
மூடனொன்றைக்கண்டு மொழிந்தாலும்பொய்யென்
றே, நாடனைத்துமெண்ணி நகும். (ரு)

அக்கரமுஞ்சொல்லு மதன்பொருளுந்தேராதார்
மக்களுடம்பின் மருவிடினு-மிக்க
பொருளாட்சிபெற்றிடினும் போக்கரியமாயை
யிருளார்விருகமொப்பா ரே. (சா)

கல்வியிலார்செய்தவமுங் கைதவமேகாதலிக்கு
நல்வினையுந்தீவினையே நன்குணர்ந்த-வல்விதியோர்
செய்கொலையும்புண்ணியமே தீநினைப்புநன்னினைப்
பே, மெய்கொள்பலநூலுரைக்குமே. (௭)

அருளாட்சியாக்க மறிவுடைமையன்பு
மருளாளர்க்கெய்தரிய வாய்மை-பொருளாண்மை
யுள்ளார்தமைமதியா வுற்சாகமாயவெல்லாங்
கொள்ளாதோகற்றோர் குழாம். (௮)

அடியாருரைத்தநன்னூ லத்தனையுட்சற்றும்
படியாதமூடர்களைப் பாடி-மிடியார்ந்த
பொய்ப்புலவராமவர்க்கும் பொன்றுப்புகழ்கிடைத்
தான், மெய்ப்புலவர்க்கியாதரிதாமே. (௯)

நாய்போற்சினந்து நரிபோற்பயம்பெருக்கிப்
பேய்போற்பறந்து பிணங்காமற்-றுய்போ
லிரவுபகலற்றுனை யெண்ணித்தினமும்
பரவுவதேகல்விப் பயன். (௰)

——∘∘✽∘∘——

## எ-வது, தவப்பொருள்.

எத்திசையும்போற்று மெழிற்புகழுமெய்தரிய
சித்தியெட்டுங்காட்டுந் திருவருளு-நத்தியவர்க்
கின்பங்கொடுத்திகலோ ரீடழிக்குந்தோள்வலியு
மன்பணைந்தமாதவத்தா லாம். (க)

பூசனையுந்தோத்திரமும் போக்கரியமெய்யன்பும்
வாசனையாத்தோன்று மனநலமு-நீசனையுஞ்
செய்கையுயர்விருந்தாற் சேர்த்தருளுஞானமும்பெற்
றுய்கைதவத்தா லுறும். (உ)

மாதவத்தால்வேல்வாங்கிவார்புவியையாண்டோர்க்
கு, மேதமற்றசித்தி யிசைந்தோர்க்கும்-போதமுற்றி
மோனக்கடலின்முழுகினர்க்குந்தெய்வமொன்றென்
றீனக்கருத்துணரா தே. (ங)

இத்தெய்வநம்முடைய தென்போரையெங்குநிற்கு
மெய்த்தெய்வமொன்றன்றிவேறனைத்தும்-பொய்த்தெ
ய்வ், மென்றுணரச்செய்யு மியல்புடையமாதவமே
நன்றுணர்ந்துசெய்வார் நரர். (ச)

தவம்புரியுமாந்தரெல்லாந் தற்பரன்சேயன்று
ரவம்புரிந்துநாட்கழிப்போ ராரும்-பவம்புரிந்து
செத்துப்பிறந்துழலுந் தீமிருகம்போல்வரென்று
கத்துஞ்சுருதிக் கணம். (௫)

செய்தவத்தாற்றேறுநரைத் தெய்வமென்று கைகூப்பி, யுய்தமுடன்போற்றுமத முள்ளதெல்லாமைதனக்குஞ், செஞ்சுடர்க்கும் வெண்கதிர்க்குந் தீமுதலா மற்றெவைக்கும், விஞ்சுபரத் திற்குரித்தாமே. (௬)

மன்னர்படையு மழையும்பெருங்காற்றுந்
துன்னரியதீயுஞ் சுடரிரண்டுஞ்-சொன்னபடி
கேட்கச்செயலுதவுங் கேடறுசீர்மாதவத்தை
வேட்கப்பெறலும் விதி. (௭)

நல்வினையிற்சிரியது நாடரியமாதவமே
கல்விச்சுருதிக் கணங்கூறும்-பல்வியப்புஞ்
சேர்ந்தார்க்குதவித் திருக்ககன்றமெய்வீட்டி
லார்ந்தாய்வறப்புரித லால். (௮)

ஒன்றன்றிவேறுதெய்வ முண்டென்றுழலாதார்
குன்றன்னநெஞ்சாற் குறிகண்டு-நின்றன்பாற்
செய்யுந்தவமே திருவருட்சீர்நல்குமென்றால்
வையும்பிறப்போர் மதம். (௯)

மண்ணிடத்திற் பொன்விளையும் வானகத்திற்பூம லருங், கண்ணினுக்குவேண்டியநற் காட்சியா - மெ ண்ணியவா, றெல்லாந்தரும்பெருமா னிச்சையன்றி யாதொன்று, மில்லாதமாதவர்சொல் லில். (௰)

## இன்பத்துப்பால்.

## அ-வது, சிற்றின்பம்.

கண்ணால்வெருட்டிக் கருத்துருக்குங்காரிகையார்
விண்ணணச்சொற்சுவையின் மிக்கதோ - மண்ணாள்
வார், தம்முறவாற்றேன்றுந் தனிப்புகழுந்தாமரசா
மெய்ம்முடிசூடுஞ்சிறப்பு மே. (க)

சஞ்சலஞ்சேர் நெஞ்சொழிந்து தானும்போய்ச் சார்வுமின்றி, நஞ்சயின்றூர்போற்கிடக்கு ஞானிக் குங்-கொஞ்சம்வந்து, தாக்கும்பெருங்காமந் தன் னைவென்றே மென்றுசிலர், வாக்குரைத்தற் றேரின் மருள். (உ)

சீரார்மனுத்திரளிற் சிற்சிலர்க்காமோர்சமையத்
தாரால்வெறுக்குந் தகையதோ-பாராதி
யைம்பூதந்தாங்குமுயி ரத்தனையும்பற்றிநிற்கும்
வெம்பூதக்காம வெறி. (ங)

கொங்கைச்சுணங்கெழிலாற்குற்றமற்றநற்குலத்தை
யங்கைப்பொருளே யறநெறியைச்-சங்கையில்லா
மெய்ப்புகழைக்கல்வியினை விட்டோர்பலகோடி
யிப்புவியிலின்றுமுள்ளா ரே. (௪)

தேக்குந்தமிழ்க்கவிக்குஞ் செப்பரிதாமின்னிசைக்கு
மாக்குமமுது மளியாதார்-பாக்கு
முலையார்நகைத்தோர் மொழிகூறிற்றுமே
விலையாவார்முக்கானு மெய். (௫)

ஆடிக்கவுட்கணிகை யாடலுக்குஞ்சாராயச்
சாடிக்கும்வேண்டுந் தனமீவார்-நாடிக்
கரங்குவித்துப்பன்முழுதுங் காட்டியிரக்குங்
குரங்கனையார்க்கேதுங் கொடார். (௬)

மானேவெனப்பிறங்கும் வாள்விழியார் வாய்மொ
ழிக்குத், தேனேநிகர்த்ததென்று செப்புவார் - வா
னேவென், றேங்குபெருவாழ்வடைவா ரோதாதா
ரோடெடுப்பார், தீங்குதவிர்தெய்வச் செயல். (௭)

சின்னத்தாற்பேராற் றிருவுருவாற்போராடு
மின்னற்சமையத்தினரெல்லாம் - வன்னமுலைப்
பேதைநல்லாரின்பப் பெருக்கிற்பிணக்கமுறு
ரேதையுயர்வென்றுகொண்டா ரே. (௮)

வேதங்கள்கோடி விளங்குதற்கும்பல்சமைய
வாதம்புவியில் வழங்குதற்கு-நீதங்க
ளெல்லாநடப்பதற்கு மேந்திழையுங்காளையுஞ்சேர்
சல்லாபலீலையின்பந் தாய். (௯)

ஐந்தொழிலுந்தேவு மடியாருமெய்யுணர்வுஞ்
சந்திரனுஞ்சூரியனுந் தாரணியு-நந்தாத
மேகப்புனலும் விரவாக்கான்மிக்கினிய
போகப்பெருக்கொழிந்து போம். (௰)



## ௯-வது, பேரின்பம்.

சமையத்தலைவருக்குஞ் சாராதஞான
மமையப்பெறவிரும்பி யாயா-திமையணையும்
போதிசையுஞ்சிற்றின்பப் போகத்தயர்ந்திறக்குந்
தீதினர்க்கே பாழ்நரகத்தீ. (௧)

எம்மானருடரும்பே ரின்பமிருக்கவம்பிற்
பொய்ம்மால்விளைக்கும் புணர்முலையார்-தம்மால்
வருந்தித்தவமறந்து மாமாயக்கூத்திற்
பொருந்தியவர்க்குண்டோ புகழ். (௨)

ஆசுகவித்தொடையா லண்ணலைக்கொண்டாடுவது
மாசுதவிர்தொண்டரொடு மாதவச்சீர்-பேசுவதுங்
கைதவத்தோர்தம்மைக் கறுவுவதுங்காசினியி
லெய்தரியபேரின்ப மே. (௩)

ஈனத்தொழிலுடையார்க் கெய்தரியபேரின்ப
மோனத்தகைசார் முனிவோர்க்கே-யானவர்தா
மோருயிர்க்குத்தீங்கியற்ரு ரூனருந்தாரொப்பில்பெ
ருஞ், சீருடையபாரிற் சிலர். (௪)

பிறப்பிறப்பிற்கச்சமுற்றுப் பேரின்பம்வேண்டுஞ்
சிறப்படையப்பெற்ருர்தஞ் சிந்தைக்-கறப்பெரிய
பாரும்பொருவருஞ்சீர்ப் பாவையரும்பைம்பொன்
னுஞ், சேருந்திருவினியாதே. (௫)

பெற்றேர்வெறுக்கரிய பேரின்பமாயநல
மற்றேர்க்கவருரைத்தல்வம்பாமே-பொற்றேகை
நல்லாட்புணர்ந்தோ னபுஞ்சகன்பால்வேறுதுணை
யில்லாதுரைத்தா லென. (௬)

பெறற்கரியபேரின்பம் பெற்றேரொவரு
முறற்கரியமெய்வீட் டுறுவா-ரறற்கரிய
பாசக்கயிறதனுற் பந்தமுற்றோர்பாழ்வினையின்
வாசக்கருக்குழிசேர் வார். (௭)

பேரின்பமாவதனைப் பேசுங்காற்பேதையர்பொய்ச்
சீரின்மருளாதசிந்தையார்-நாரிற்
கிரங்கியொருபெருமா னெண்ணம்போற்றேன்றி
வரங்கொடுக்குஞான வழி. (அ)

தொழுவார்க்கருள்வழங்கச் சோம்பாதபெம்மான்
வழுவாநெறியுடைய மன்னன்-குழுவாய
தொண்டரொடுதோன்றத் துணைவிழியாற்காண்பது
வே, யண்டரியபேரின்ப மாம். (கூ)

வல்லானைக்கண்டு வணங்கிமனவிருப்ப
மெல்லாம்பெறுவதுபே ரின்பமென்று-சொல்லா
னிருபாதத்தொண்டுசெய்யு மேழையோர்க்கில்லைச்
சொருபாநுபூதிச் சுகம். (ய)

## ய-வது, புகழின்பம்.

சாகாப்புகழ்புனையான் ருரணியையாண்டாலும்
வேகாப்பிணமனையான் மேதினியோர்க்-காகாத
செய்கையினுற்சொற்சுவைச்சீர்ச் செந்தமிழ்ப்பாவ
ல்லான்வாய், வைகவிபெற்றேனு மனு. (க)

மேகந்தவழ்சிகரி மெய்ப்புகழ்க்காச்செய்தாலும்
பூகம்பத்தாலும் பொடியாகும்-பாகனைய
சொற்கவியொன்றேற்றாற் சுடரிரண்டுமுள்ளமட்டு
நிற்குமெங்கோனுரை நிசம். (௨)

நவகீர்த்தியாதுமின்றி நந்தினோர்தம்மி
லவகீர்த்திபெற்றவர்மே லாவார்-தவகீர்த்தி
யில்லாத்துறவிக் கிகலோரைக்கொன்றுழக்கும்
வல்லாளன்மேலாகு வான். (௩)

தெய்வமுலகைச் சிருட்டித்தளிப்பதுவு
மெய்வலிமைத்தொண்டர் வியப்பவென்றாற்-பொய்
வளமை, யுள்ளசிலர்மெய்ப்புகழோர்க் கூறுரைக்க
ஞாயமுண்டோ, கள்ளமறக்கற்றோர் களே. (௪)

உள்ளமனிதரொல்லா மூனோடுயிர்வதையுந்
தள்ளமுயன்றியற்றுந் தன்மையனே-விள்ளரிய
பெம்மான்மதலையென்னும்பேராண்மைகொண்டோ
ர்க்கே, பொய்ம்மாலறுக்கும் புகழ். (௫)

நாண்மிகவுஞ்சென்றாலு நாவலவன்பாவணிந்தோன்
மாண்மிகுந்தநீதி வயவேந்தன்-கோண்மலிந்த
புன்சமையவேரறுத்தோன் பூண்டபுகழோங்குமெ
ன்றற், கொன்சகத்திற்கண்டு கொளல். (௬)

புகழ்விருப்பமின்றிவம்பிற்பொன்றேடிக்காப்போர்க்
கிகழ்வுடனேயச்சமுண்டா மென்று-பகலனைய
நூலுரைத்துநல்கார் நொடியிற்குடர்பறிக்கும்
வேலுடையார்க்கீவார் மிக. (எ)

குற்றம்பெருக்குங் கொடுங்கோலரசர்குல
முற்றழியத்தாக்கு முனைவீரன்-பெற்றபுகழ்
நல்குரவொன்றின்றி நரரெல்லாம்வாழவைப்போன்
மல்குபெருங்கீர்த்தியினு மால். (அ)

வெய்யினிலவெறிக்கு மேதினியெல்லாம்புரந்து
பொய்யில்செங்கோலோச்சும் புரவலற்கு-மெய்யின
னென், றெல்லாச்சமையத்தினருந்தொழுங்குருவா
ம், வல்லாற்குங்கீர்த்தி வளம். (கூ)

சொல்லிலடங்காது சோராதுதொல்புவியிற்
புல்லினிடத்தும் பொருந்துமே-நல்லிதயங்
குன்றாதமெய்யடியார் கூட்டங்குறித்திறைஞ்சும்
பொன்றாததெய்வப் புகழ். (ய)

——∘∘※∘∘——

## முத்திப்பால்.

# ௰௧-வது, சுவர்க்கமுத்தி.

கொன்றருந்தும்புன்சமையக் கூட்டத்தொருமனித
னன்றறிந்தமட்டு நடத்தித்தான்-பொன்றலுற்றூற்
பொன்னுலகிற்போகம் புசித்தலெனக்கண்டுபின்னர்
மன்னுலகிலாவான் மறை. (௧)

அருணூட்டநன்றென் றறியாதான்சொல்லு
மருணூட்டம்பற்றிநிற்கு மாந்த-ரிருணூட்டுப்
பேயனையாரன்னவர்க்குப்பேதையர்பொய்ப்போகம
தே, தூயமுத்தியென்னுஞ் சுகம். (௨)

கூட்டம்பெருக்கியுயிர் கொன்றனலில்வெந்தருந்தி
வேட்டவர்தாந்தம்மளவின் மெய்யாய-வாட்டடங்க
ண், மின்னையன்ன வியனுலகிற்றேய்ந்துமுன்பு
தின்னுகங்கொள்வார் திறம். (௩)

வெங்கோலார்தம்மையெல்லாம்வெட்டும்விதிர்வாளு
ஞ், செங்கோலுந்தாங்குந் திறல்வேந்தன்-றங்கோர்
நகரின்மொழிதவறு நல்லாளைச்சேருஞ்
சுகமுஞ்சுவர்க்கமென்றே சொல். (௪)

துன்னரியசொற்கமென்று தோகைநல்லார் கொங்
கைக்கும், பொன்னகரிக்கும்பேர் புனைந்திருந்து-மின்
னவித, மென்றுரையாப்புன்மதத்தோ ரொத்தகைத்
தோவென்றுருகி, நின்றுவிழைவார் நிதம். (௫)

இன்னாரின்னங்க மெனத்தெரிந்துதாமுழைத்த
பொன்னாற்றுணிந்தியற்றும் புண்ணியத்தோர்-தின்
னாதற், கொள்ளாதாரொன்னில்விண்ணூர்க் கோவா
கிப்பூதலத்து, மெள்ளாதமன்னவ ரே. (௬)

குடிவருந்தக்கோலோச்சுங் கொற்றவனேயாதிக்
கொடியமாபாதகத்தோர் கொள்ளு-நெடிய
நரகைக்குறிக்குங்கா னல்லோருக்கெய்தும்
விரகபதமாஞ்சுவர்க்க மேல். (௭)

முன்வைத்தகாலை முனைவீரர்க்கச்சமுற்றுப்
பின்வைத்திடாதுவெற்றி பெற்றோர்க்கு-மின்வைத்த
வேலாற்குத்துண்டுவிழுந்தோர்க்குஞ்சொற்கமென்று
மேலாயநூலுரைக்கு மே. (௮)

என்புதசைதோ லிரத்தமுதலியவாற்
புன்புலவார்தேகம் பொருந்தாமற்-பொன்புரையுந்
தோற்றமொடுநன்மணமுந்தோயுமுடற்கொள்வாரோ
யேற்றமிகுசொற்கத் தினர். (௯)

நற்கருத்துநற்றெழிலு நல்லுணவுமுள்ளார்சேர்
சொற்கச்சுகமதனைச் சொல்லுங்கால்-விற்ககனத்
துண்டுநகரிவ்வாறென் றுன்னியவாறானிழந்துங்
கண்டுமகிழுங் கரு. (௰)

# ௰உ-வது, பதமுத்தி.

ஆலயத்திற்சென்றுங் கமர்தேவைக்கைகுவித்துச்
சாலமகிழுந் தகையுள்ளார்-காலபய
மின்றியடியாரோ டெண்ணியவூர்க்கேகியங்கு
நின்றிறைஞ்சிவாழ்கை நிசம். (க)

செங்கீரூன்கள்ளரக்குச்சேல்விரும்பிப்பூசைசெய்யும்
வெங்கீராராலயத்தின் மேவாரோ-முங்கீர்சூழ்
பூலோகம்போற்றும் புனிதச்சமையமுற்றுச்
சாலோகஞ்சேரவல்லார் தாம். (உ)

எம்மளவுந்தெய்வமிதென் றேதேனுமோருருவைச்
செம்மலராற்பூசைதினஞ் செய்வோர்-தம்மகத்தி
லெண்ணியவாறிட்டதெய்வத் தேவற்பணிபுரிந்து
மண்ணிற்பிறந்துயர்வா வார். (௩)

எந்திரத்திற்கோணெழுதி யெம்பெருமான்பீடமென்
று, மந்திரத்தால்வாழ்த்தி மலர்தூவித்-தந்திரத்திற்
பூசைபுரிவோர்தம் புந்தியெண்ணுந்தேவருகி
லாசையொடுவீற்றிருப்பா ராம். (௪)

மானதத்தாற்பூசை வழுவாமற்செய்துவப்போ
ரானபுனித ரனைவோருந்-தானறிந்த
தெய்வத்துலகிலதன் சேயாகிப்பாரில்வந்து
செய்வரருட்பேற்றின் செயல். (௫)

வேண்டுமுருவில் விழியாமனம்பொருந்த
யாண்டும்புகழ்நலமே யென்றிரப்போர்-கூண்டுவரு
ம், பொல்லாருயிர்குடிக்கும் போர்த்திறலும்போத
மொடு, வல்லாண்மைச்சித்துமெய்து வார். (௬)

அம்புலிக்குஞ்செங்கதிர்க்கு மப்பாலகண்டமென்று
நம்புமுணர்வோடுருவை நாடுவோ-ரம்புவியி
லோர்சமையமுண்டாக்க லுள்ளதொன்றைச்சீர்படு
த்த, லார்சகுணராவார்க ளாம். (௭)

எம்மதத்தாற்றேறு மியல்புடையமேலோர்க்குஞ்
சம்மதமாஞ்சாட்சிதனை நாடிக்-கைம்மலர்கள்
கூப்பியதைக்கண்டுகொண்டோன் கோடாநுகோடிய
ண்டக், காப்பிசைந்தமெய்த்தேவின் கண். (௮)

இவ்வுலகமானிடத்தி லேதமற்றநல்லுடலுஞ்
செவ்வுணவும்பெற்றுத் திருவருளை-வெளவுமன்பா
லிற்றுறவுற்றேற்றுண் டிசைந்ததிருவேடம்
பற்றுவதேமேலாம் பதம். (௯)

மானிடத்திலன்றிமுத்தி வாயாதான்மன்னுயிர்க்கு
வானிடத்தில்வேறுமொரு வாழ்வுண்டோ-கோனி
டத்தில், வாழ்தலெனக்காண்டன் மனத்தகமேமாறி
லது, வீழ்தலெனக்கொள்ளுமற்றோர் மெய். (௰)



# ௰௩-வது, ஐக்கியமுத்தி.

நிற்குநிலையுணர்த்தி நெஞ்சொழியப்பார்க்கவல்ல
சற்குருவுந்தெய்வச் சகளமுமே-நற்குணமுந்
தியகுணமுமற்றுச் சித்திகளுங்கைத்திறப்ப
தாயபரவீடளிக்க லாம். (௧)

அண்டங்கள்வாழு மகண்டமேவீடென்றுத், தொ
ண்டனின்னம்பாரில்வந்து தோன்றுமெனக்-கண்ட
வர்க்கே, யம்புராசிப்புனலி லாற்றுநீர்போற்கலந்து,
வெம்புமிருளற்றொழியும் வீடு. (௨)

தற்பரமுண்டென்றுணர்ந்துந் தாறெழியச்சோம்
பிநிற்கு, மற்பமதிசிறிது மாகாதே-கற்பனைக
ளெல்லாந்தவிர்வுற் றியம்பரிதாமெய்வீட்டிற்
கொல்லாமையா லடைவோர்க்கு. (௩)

சத்தாயசூனியமுந் தானனசித்துமொன்றும்
வத்தாயதெய்வம் வழங்குமே-சித்தாடி
யானந்தவாரிதிக்கு மப்பாற்போயாருமற்ற
வானந்தனிற்கலக்கு மால். (௪)

பத்திவயிரம்பழுத்ததான் ஞானமுண்டாய்ச்
சித்தியடைந்து திருத்தியாய்-முத்தி
யடைவோரொவரு மதுவாதலாற்பின்
படையாதா மந்தப்பரம். (௫)

பாவலவர்கூறப் பகல்போலிலங்குபுகழ்க்
காவலராமுண்மைக் கடவுளார்-சீவறொன்று
நின்றுரவையுணரா நின்மலமுமானார்மெய்
யென்றூர்க்கே முத்தியிதம். (௬)

நானேமுதன்மையென்னு நாவினர்க்குநானதல்லத்
தானேதலைமையென்னுந் தன்மையர்க்கு-மூனே
வராதமுத்தியெய்தரிதாம் வண்மைகண்டுவாழ்வோர்
தராதலத்திலேகதே சம். (௭)

முத்தியென்ருென்றின்றேன் முனிவோர்க்குயர்ச்
சியில்லைப், பத்திநிலையிற் பயனில்லைச்-சத்தியமும்
புண்ணியமுமாதவமும் பொய்யாமெனத்துணிந்து
நண்ணியவர்க்கே நலம். (அ)

மோக்கத்துயர்வுணர்ந்து மூதுலகமுற்றுமன்பிற்
காக்கப்பெறுஞ்சிறப்புங் கைப்பாகி-யாக்கமிகுஞ்
சித்திதருஞானமுறூர் தீவிருகம்போல்வவொன்று
சத்தியமுஞ்செய்யத் தகும். (கூ)

பிறவாதவீட்டினிச்சை பெற்ருேெவரு
மிறவானைவேண்டியவா றெண்ணி-மறவாமற்
ருேத்திரஞ்செய்துண்மைச் சுகநாடித்தொண்டுபுரிந்
தாத்திரங்கொண்டாய்வார்க ளாம். (ய)

விற்பனம் முற்றிற்று.



நூற்புகழ்ச்சி.

கல்லுமுருகக் கவிபாடுநாவலவ
ரல்லும்பகலுமறும் பொருட்குச்-சொல்லும்
பலநாமதாசன் பகர்விற்பனநூல்
சிலநாமதாசருக்குந் தேன்.

ஆ செய்யுள்-ளஙஉ.



நான்கு நூல்

முற்றிற்று.



தெய்வமே துணை.



உ

குருவேதுணை.

# அருளாட்சி.

## காப்பு.

தெருளாட்சிக்காரருண்மைச் சிந்தையினுக்கான
வருளாட்சிநூலொன் றளிக்கும்-பொருளாட்சி
கொண்டவனைநாடிக் குலைகுலைந்துவாடாமெய்த்
தொண்டர்மலர்ப் பாதத்துகள்.

## வரலாறு.

வள்ளுவப்பேர்மாமன் மகட்புணர்ந்துமக்களன்ன
தெள்ளுதமிழ்நூனான்கு செப்பினேன்-விள்ளு
மவைக்குத்துணையா மருளாட்சிநூல்க
ளவைக்கு முயிராவதே.

## தேற்றம்.

நான்முகப்பில்வேள்வி நுவன்றகொடுமையெண்ணி
நான்முகத்தோனுவினளை நான்மதியே-னான்முகக்க
வொண்ணுதென்முப்பா லுரைத்தோ னொருநாவின்
பெண்ணுளுயர்ச்சி கண்டபின்.

## நூல்.

அருள்போலுமிக்கநல மங்குமிங்குமில்லை
யிருள்போக்குமெய்யொளியா மீசன்-மருள்போதத்
தெல்லாவுயிர்க்குமின்ப மீவதனாலல்லவோ
நல்லானெனவிளங்கி னான். (க)

தம்மிலெளியார் தமக்கிரங்குந்தக்கோர்பால்
விம்மியழுந்துயர மேவாதே-யிம்மி
யளவெய்தின்மேரு வொப்பதாமென்றிடையு
முளமுள்ளா ராவாருவர். (உ)

இன்னுமொருதாய்வயிற்றி லேகாதெழில்வீட்டின்
மன்னுநிமித்தம்வந்த மாந்தர்க்கு-முன்னுதிக்கு
நல்லடையாளத்தை நவிலுங்காணுற்றமுண்பான்
கொல்லலிசையாக் குணம். (௩)

ஆருயிர்கட்கொன்றுரு மாக்கங்கடையென்னப்
பாருணரச்சொன்னோன் பதம்போற்றிக்-கூருலவா
வச்சிரத்தானூரார் மகத்தூன்வெறுத்தனரோன்
மெச்சிடுவார்வல்லோர் மிக. (௪)

எந்தநலமில்லா ரொனினுமிரக்கமென்னுஞ்
செந்தகையொன்றெய்திலவர் தேவர்க்கு-முந்தறிஞ
ரொன்னத்தெளிந்தோ னெவனேவவன்கொடுங்கோன்
மன்னர்க்கெமனாகு வான். (௫)

அருநோன்புகொன்றருந்தி டாமையெனச்சொன்ன
திருநூலைவிட்டுச் சிலர்தாந்-தருநாடு
கொள்வேமென்றெண்ணிக் கொலைமுயன்றா னுண்கின்று, ெள்வேமவரை நித்தமியாம். (௬)

புல்லுண்பவற்றைப் புசிப்பார்குலமுழுதுங்
கொல்லுநலத்தைக் குறித்தென்று-மல்லும்
பகலுமுயல்வோரோ பல்லுலகுஞ்செய்தோன்
மகனென்றமேன்மை பெறுவார். (எ)

வலியார்மெலியார்தம் மாட்டிறுமாப்புய்க்கிற்
புலிபோற்சினவாப் பொறுமை-நலியாத
வீரத்தனிவேற்கை வேந்தருக்குமெய்யருட்சீர்க்
காரருக்கு மாகாக்கடை. (அ)

தானேருயிர்வதையார் தன்விழியினேயொருவ
ரோனேகொன்றாலு மிரங்குவார்-வானோர்க்கு
மேலாம்பதத்தினிடைவீற்றிருக்குமெய்யுணர்ந்தோர்
போலார்பொறுப்பார் புகழ். (௯)

சித்தியொடுமுத்திநலஞ் சேரப்பெறல்வேண்டிப்
பத்திமுயன்றுழைக்கும் பண்போரே-யெத்திசையு
நத்திக்கொளநிறைந்து நாசமின்றிவாழொருவன்
சத்திக்கிசைந்த மனத்தார். (௰)

தன்னேருயிர்கட் சதிசெய்யாமானிடர்தம்
பின்னேதிரிவான் பிரானென்று-முன்னே
மறைகள்பகர்ந்ததன்றி மாதவத்தோர்தாமு
மறைவாரது நிசமேயாம். (௰க)

எல்லாச்செயலு மிறையறிவானென்றுணர்ந்த
வல்லார்பலருமுயிர் மற்றொன்று-பொல்லாத்
துயரடைதற்காணிற் றுடிதுடிக்குநெஞ்சத்
தயர்வொழிக்க மாட்டாதவர். (௰உ)

தேவனெனினுமொன்றைச் செற்றருந்திற்றீயோரே
யாவனெனினுமதொன் றில்லாரோ-பாவ
வினைதீர்ந்துளாரோமெய் மெய்யென்றுரைப்போ
ரெனையாளுந்தாளுடையாரே. (௰௩)

நான்முகவன்சொல்லதென நம்பிநளிர்கடற்பார்
மேன்மகஞ்செய்தூனருந்தும் வேதியர்தம்-பான்மை
யவனேர்வரினுமதொன் ருகாதென்ருர்க்குந்
தவநேசர்க்காகா ததே. (௰௪)

நல்லருளென் றுள்ளவொரு நாமநமைப்படைத்தோன், வல்லமைக்குங்கொன்றருந்தா மாட்சிக்கு-மல்லதுமற், றெந்தப்பொருட்கு மிசையாதெனத்தினமுஞ், சந்தப்புலவர்சொல்கின் றூர். (௰௫)

தெய்வம்பலவெனும்பொய்ச் சீராட்டுளாரொருக்கா
லுய்வடைந்திட்டாலு முறலாகும்-கைவலியாற்
கொன்றுபுலாலருந்திக் கொக்கரிக்குங்கோதுடையா
ரொன்றுமுய்யமாட்டார்க ளே. (௰சு)

ஓருயிரின்றேகத் துறுநோயொழியமற்றோர்
சீருயிரைக்கொல்வார் சிலமாந்தர்-பாருலகி
லித்தனைநாட்டாம்வாழ்வ தென்றுமறியாரிதெண்ணி
ற், சுத்தமுழுமூடத் தொழில். (௰எ)

ஊனேறவுண்பா ருயர்ச்சியுறுங்காலந்
தானேதனக்கிணையாந் தற்பரனும்-வானேற்றம்
வேண்டேமெனுமுவகை மிக்குடையமேலோர்தாங்
கூண்டேசுநிந்தை கொளும். (௧அ)

ஈசன்விரும்புநல மெல்லாங்கொடுத்தினைய
தேசமறியப்பதத்திற் சேர்த்தாலு-நீசர்க்
கினிதாயவூனொருசிற் றெள்ளளவுண்டுள்ளா
ரொனிலியானவவைமதி யேன். (௰கூ)

சித்தியொருசற்றியற்றிச் செத்தோரையுமுலகோர்
முத்திபெற்றாரென்றே மொழிகுவா-ரொத்திறத்தோ
ராஞுலுங்கொல்லா வருநோன்பொன்றில்லாரோன்
மானுர்வயிற்றினுழை வார். (உ௰)

மேனாள்சிறுத்தொண்டன் வீட்டில்வருமீசனையுந்
தானுவிகழத் தலைப்பட்டா-ரூனுறும்
வேள்விப்புகைமுகக்கும்விண்ணவரையெண்ணுவரோ
நீள்விற்றுணை நுதன்மின்னே. (௨௧)

ஆட்டுவடிவத் தவுணன்றனையருந்தி
மீட்டுருவெய்தாதெரித்த மேலோனைக்-கேட்டுணவு
சின்னுணுகரும்வினைத் தீமையுற்றுனென்றுநனி
சொன்னாருமுண்டே துணிந்து. (௨௨)

நல்லவுணவருந்து நாகரிகத்தோர்க்கலது
வல்லமனிதப்பிறவி வாயாது-கொல்லன்
முயன்றானருந்திலவை முற்றுமாத்தோன்றும்
வியன்றேய்ந்துழல்வார்மெய் மெய். (௨௩)

ஓருடல்விட்டேகுமுயிர் வேறுடலெடுக்குஞ்
சீருணருமாந்தர் சிலரோனே-நீருடையார்
பல்லோரிம்மாற்றம் பகர்நூலுமப்படியே
யெல்லோர்க்குந்தோன்று திது. (௨௪)

எந்தவேதத்தி லியம்பியவாறேனுமுயிர்
நந்தவதைத்தூனருந்த னுதனது-சிந்தனைக்குஞ்
சம்மதமாமென்னிலவன் ருட்டாமனைத்துணைக்கு
மும்மலமாம்பேய்களஞ்சு மோ. (௨௫)

போதங்கடந்தபரி பூரணன்ருனேபுகலல்
வேதங்களாகுமென்னில் வேற்றுயிர்கட்-கேதங்கள்
செய்யச்சொலானெருக்காற்றீயோர்கள்செப்பியவுற்
றையப்படாதிசைத்த தாம். (௨௬)

சீலத்துனவதனுற் றேகம்வளர்த்தார்சிலரோர்
காலத்திலூனருந்தக் கண்டோமே-யாலத்தை
யுண்டாவிநீத்தார்க் குயராருலகினித்தங்
கண்டார்வசைகொள் கையால். (௨௭)

ஆவிநிலையண்ணு வருளார்ந்தநற்குலத்தோர்
பாவிகளாமற்றையர்தம் பாலேகிச்-சேவித்துப்
பொன்றேடிவாழ்வதெண்ணிற் பொல்லாப்புழுநரகி
லன்றேவிழுவதொப்பா மால். (௨அ)

கொல்வார்நரகிற் குடியாவரென்னமுன்னூல்
சொல்வாய்மையோர்ந்துந்துணிவாரை-வல்வாட்கை
கொண்டடங்கனிதிக் குறையன்றவருலகத்
துண்டனபலகோடி யுயிர். (௨௯)

கொன்றருந்தவானெருவற் கூர்வேல்குடர்குழப்ப
வென்றவன்பலக்கணத்தின் மேவுமே-துன்றகில
மீதுநாற்றிக்கில் விளங்குமுயிரனந்தம்
பாதுகாத்திட்ட பயன். (௩0)

மானிடராப்பாருலகில் வந்தோரனைவர்களு
மூனிணந்தின்னுமை யுனுற்றுவான்-மேனித்தி
லுள்ளானென்றேதுமொருவனே யென்றுளாக்கிற்
றள்ளார்களுண்மைத் தவர். (௩௧)

கொல்லாவிரதக் குணமேதவமாகு
மல்லான்மற்றெல்லா மவமாகும்-வல்லா
ரறிவார்மற்றேனையவ ராருரைத்திட்டாலு
குறியாமென்றெண்ணிக் கொளார். (௩௨)

சங்கப்புலவர் தமதுள்ளிறுமாப்பைப்
பங்கப்படுத்துமொரு பாவலவ-னெங்கட்
குரைத்ததமிழ்வேதத் துட்கருத்துற்றோர்தார்
தரைத்தலத்திற்கொன்றருந்தா தார். (௩௩)

இரவைப்பகலாக்கி யேந்திழையார்க்காண்மை
வரவழைக்கின்றோனினு மற்றோர்-சரபுடலூ
னுண்பார்களாயினவ ருறுடையானென்பரோ
நண்பாளராவார் நமக்கு. (௩௪)

கொல்லாமையொன்றுபற்றிக் கோதுபசெய்கின்ற
நல்லாரடையு நரகத்து-மெல்லா
விரதங்களுமுயன்றான் வேட்கையறுமேவுங்
கரவுபடும்வீடு கடை. (௩௫)

தெள்ளுமறைக்கருத்தைத் தேறுதுதிமகத்தான்
கொள்ளுநரோமுன்னதனைக் கோதென்ற-வள்ளுவனார்
மெய்வீட்டிற்சேர்ந்த விதங்கேட்டறியீரோ
பொய்வீடுவிண்ணோர் புரம். (௩௬)

நான்மறைமேற்குற்ற நவின்றிட்டுநோய்விரும்பு
மூன்மகிழ்ந்துண்போரே யுலகெல்லா-மேன்முதலெ
ன், றோதுமொழிமட்டு முமக்குக்கசப்பான
தேதுணர்ந்து சொன்மினெனக்கு. (௩௭)

போதோடிளம்புற் புசிக்கின்றவானினத்து
டேதோவொன்றென்பருந்து மீனம்போல்-வாய்தோ
யும், வேதத்தோரிற்சிலர்தாம்விண்ணவரூர்வாழ்வை
நம்பி, யேதத்தூனுண்பார்களே. (௩௮)

சாவக்கிடக்குமுயிர்த் தட்டழிவைக்காணின்மிகும்
பாவமனிதர் பதைத்திடார்-தேவருக்கு
மேலாயதன்மையுளார் வெந்தநெருப்பின்மெழுகு
போலாய்வார்நெஞ்சம் புலர்ந்து. (௩௯)

விண்டலத்துத்தேவருக்கும் வீறுபெற்றசித்தருக்கு
மண்டலத்துள்ளார்க்கு மருந்தன்றே-கொண்டல்வெ
ட்குந், தாதாவாயெந்தச் சமயத்தினர்க்குமோரோ
யாதாரமாவா னருள். (௪௰)

பொருளுடையார்க்காக்கம் புரைதீர்புலமைத்
தெருளுடையார்தம்மையொன்றச் சேர்த்த-லருளு
டையார்க், காக்கமுலகத் தனைத்துயிருந்தம்முயிர்
போற், காக்கமுயலுங் கடன். (௪௧)

கொல்லல்விழைவார் குவலயத்தில்லாதொழிய
வெல்லன்முயன்றொருவன் வென்றியுற்றான்-மல்ல
லுலகங்குறைவுபடா துள்ளபடிமுன்போ
லிலகுஞ்சிலநாளை யில். (௪௨)

உலகின்கணிற்றைவரை யுண்டாயதொண்ட
ரலகின்றியபலபே ரானர்-புலவுண்கை
நீங்கச்செய் வான்முயன்று நீடுபுகழ் தோய்ந்துவிண்
ணோ, ரேங்கச்செய்திட்டாரிலர். (௪௩)

வேடர்களுங்கொல்லா விரதியர்களாமாறிங்
காடலியற்று மவன்றிருத்தா-ணடலன்றி
மற்றையரைச்சற்று மதியேனென்பாருறவை
யெற்றையினுமியான்மறவே னே. (௪௪)

தம்மைப்பிறர்வதைப்பச்சற்றுமிசையார்களெண்ணில்
செம்மையுயிரைச் சிதைக்கின்ற-ரெம்மையினு
மீடேறமாட்டார்மற் றெவ்விதச்சீருற்றாலும்
வீடேயடையார்மெய் மெய். (௪௫)

பார்த்தன்சமர்க்களத்திற் பல்கோடி நீங்கியற்றுந்
தூர்த்தர்களைக்கொல்வதஞ்சித் துக்கித்தான்-மூர்த்தி
யொருவனருணீதி யுணர்த்தினானோரா
விருண்மனத்தாரீனமென்பாரே. (௪௬)

ஊனுண்டுவிற்பா னுதரத்துச்சேயொருவன்
றானுண்ணாவிட்டாற் றவறன்றே-மானுண்கண்
வேசிமகளொருத்தி மெய்க்கற்பினளாகி
லேசிமறுக்கவொண்ணாதே. (௪௭)

எந்தச்சமயத் தினரேனுந்தாமருவுஞ்
சொந்தச்சமயஞ் சுகமென்பார்-நந்தவொன்றைக்
கொல்லாநெறியே குணமென்றுகூர்ப்புடையா
ரொல்லாருநன்குரைப்பாரே. (௪௮)

கொன்றருந்தனன்மையெனக் கூறுநெறிமுகப்பி
னின்றவர்க்குஞ்சற்றுதவு நீர்மையாற்-குன்றலின்றி
யெங்குநிறைந்தபொரு ளினமுற்றவாறுணரார்
கங்குல்பொரு மனத்தார்கள். (௪௯)

வண்ணான்சொற்கஞ்சி மனையைவனத்தினிடை
யெண்ணாமல்விட்ட விராமன்றான்-விண்ணாடர்
போற்றத்தவசு புரிந்தானைக்கொன்றவித
மேற்றமெனச்சொல்லறியே மியாம். (௫௰)

தெய்வமனிதத் திருவுருவத்துற்றெென
வையமின்றிச்சொல்வா ளவில்லார்-வையகத்திற்
செய்யரியவண்மை சிலகாட்டுஞ்சித்திநலங்
கையகத்திற்பெற்றோர் களை. (ருக)

எல்லாவடிவு மிறைவனேயென்றுணர்ந்த
நல்லாருங்கொன்றருந்தா ஞாயத்தி-னில்லாரைப்
பொல்லாரென்றெண்ணிப் புறங்கூறலாமவர்தம்
வல்லாண்மைக்கில்லை வழு. (ருஉ)

பொருளைமிகமதித்தார் புண்ணியங்கட்காகா
ரருளைத்தினம்விரும்பு மன்பர்-குருளையொடு
பார்ப்புமருந்தும் பலர்க்காகாரென்றவிரு
தீர்ப்புமுலகறிந்த தே. (ருங)

நானிலத்துமாந்தர் நலியப்படுத்துகொடுங்
கோனிறுத்துமன்னர் கொதுகன்னர்-வானிடத்து
வாசவனுமாலயனு மற்றையருந்தானன
வீசனருள்பெற்று ரொதிர். (ருச)

அந்நாளொருபே ரருளாளன்பெற்றமகன்
மைந்நாகமன்னதிண்டோண் மன்னவரைப்-பைந்நாக
க்,கோவெதிரிற்றேரைக் குழுவாப்படுத்திடல்பல்
பாவெடுத்துக்கூறும் பரிந்து. (ருரு)

பொருளிறுமாப்பெய்திப் புரவலராஞரு
மருளிறுமாப்பெய்தினர்க் கொப்பாகார்-சுருள்பனைக்
கை, வெள்வேழத்தான்றிருவோர் வேதமுனிசாபத்
தா, லள்வேலையி லமிழ்ந்ததால். (ருசு)

எச்சமயத்தோரு மியம்புபலநூலிடத்துப்
பொச்சமொடுமெய்யுமொன்று போல்பவே-யச்சம
றுத், தாளும்பெருமா னடியார்க்கடிமைசெய்து
கோளுங்குறியு மற்றோர்க்கு. (ருஎ)

முன்னூலினத்து மொழிகின்றநூலினத்தும்
பின்னூலினத்தும் பிறங்குமே-யெந்நூற்கு
மாதாரமாகு மறிவனருளார்கட்
சிதாரவிந்தச் செயல். (ருஅ)

அருளேயுருவா மடியார்தமக்கு
மிருளேவடிவா யினர்க்குந்-தெருளு
மருளுங்கலந்த மதியாளருக்கு
மொருவன்றுணையாவ துண்டு. (ருசு)

பொருளாண்மையுற்றுவக்கும் பூரியர்களொல்க
வருளாண்மைவேண்டு மவர்பாற்-சுருள்கூந்த
னல்லார்மயற்பேயு நல்குரவாஞ்செந்தழலு
மொல்லாது சற்றுயினும். (சுய)

சித்தியரிதென்றுந் தேவருக்குமெய்தரிய
முத்தியெளிதென்று மூடர்தாம்-பித்தியன்ற
நெஞ்சத்தாரொன்ன நிகழ்த்துவாரந்தமொழி
நஞ்சத்தோடொப்பா நமக்கு. (௬௧)

அருள்வேட்கையெய்தி யலமருவார்க் கெல்லாம்
பொருள்வேட்கையொன்றுமிகப் பொல்லா - திருள்
வேட்கைப், பாவிகள்பா லுள்ளமிகப் பல்கால் பதை
பதைப்ப, மேவியிரந் தேத்தவிடும். (௬௨)

ஈசனருட்பெரும்பே றெய்தினாயீடில்விண்ணோர்
வாசவனும்வந்து வணங்குவா-னேசம்வைத்து
வேண்டித்தவஞ்செயுநாண் மேதினியின்மானிடருங்
கூண்டிட்டிகழ்வார் குறித்து. (௬௩)

பைத்தலையபாம்பைப் பருகும்பசியமயில்
கைத்தலத்து முட்டையெனக் காணுநா-ளத்தகைய
மாசுணத்துக்கூணும் வகையுணரவேண்டுமே
தேசுபெறநாடுஞ் சிலர். (௬௪)

மன்னர்முடிமேன் மலர்த்தாளும்வானுருவா
முன்னவன்பொற்றுளின் முடியுமாங்-கன்னலம்பா
கன்னதமிழு மருட்பேறுமம்புவியோ
ருன்னரிதாக்கொண்டொளிர் வாற்கு. (௬௫)

கரத்திற்கடையாய்க் கழியூனருந்துந்
தரத்துக்கொடியார் தமக்குஞ்-சிரத்தைமுத
லாயகுணங்க ளனைத்தினுக்குந்தூரமென்கை
தூயமுதுநூலுணர்ந்தோர் சொல். (௬௬)

கல்லாரெனினுங் கருணையுடையாரே
னல்லாரேநூன்முழுது நன்குணர்ந்த-வல்லார்கண்
மானுமொழியினராய் வான்விரும்பியூனுகர்ந்தா
ரேனுமிழிநாயனை யாரே. (௬௭)

வானமடந்தையரை மண்ணிற்புணர்வதற்கு
மானதவமுண்டதை விட்டுத்-தானழிந்த
பின்னவர்தம்மின்பம் பெறலாமெனநினைத்தான்
றின்னலைப்போலில்லைச் சிரிப்பு. (௬௮)

காலன்வருமுன்னருட்சீர் கைவரநாடாமலினி
மேலடையுமேனிநலம் வேண்டுரிற்-றால
வுடலுமுயிருமொன்றென் றேதுநாமேலென்
றிடலாகுமென்ற னிசைவு. (௬௯)

ஈசனருளு மிரக்கமுமொன்றென் றுணரார்
பாசவினையிற் படுமாந்தர்-நாச
முறலரியமெய்ஞ்ஞான முற்றேரொவரு
மறலுங்குளிர்ச்சியு மென்பார். (௭௰)

மேலுலகமில்லெனினும் வேண்டுநருக்கீதலொன்றே
சாலுநலமென்னுந் தமிழ்வேத-நாலுவகை
யோகைக்குமுந்தி யுயர்புகழ்க்கோர்வித்தாகு
மீகைக்குந்தா யிரக்கமே. (எக)

ஆராலுங்காண்டற் கரியானருண்மலிந்து
சீரார்மழைபொழியச் செய்யானேற-போராடும்
வேல்வேண்டும் வீரர்பலர் மேன்மேலு மெச்சுகைச்
செங், கோல்வேந்தர்வாழ்வு நுடங்கும். (எஉ)

நம்போலொருமனித னுதன்ருட்சீர்பெறலா
லம்போதிநீரை யருந்தினுன்-செம்போத
முள்ளார்மற்றென்றை யுயர்வினதாக் கொள்வாரோ
கள்ளார்மலர்க்குழற்றே காய். (எங)

பொன்னுறழவொன்றுகிப் பூணுறழப்பற்பலவா
மன்னுமவனருட்சீர் வாஞ்சையினிற்-றுன்னுநரே
மானிடர்களாவார்கண் மற்றையவரெல்லோருங்
கானிடத்துவாழ்விருகங் கள். (எச)

அருளேயுயர்வென் றறைந்தாலுமொப்பா
விருளாளர்வாழு மிகத்திற்-பொருளியாதும்
வேண்டாததனை விரும்புகின்றவித்தகரை
யாண்டானெனவுரைக்கலாம். (எரு)

ஐயமிட்டுண்ணென் றவையாருரைத்தபடி
செய்யத்துணிந்தோர் சிலர்தாமே-வையகத்தின்
முக்காலேனாலுமா முக்காணிமுந்திரிமூன்
றெக்காலுமில்லையென்போ ரே. (எசு)

அருவமுடனுருவ மாகியமெய்த்தெய்வங்
குருவடிவேயென் றுணர்ந்துகொண்டு-திருவருட்பே
ராழியிடைமூழ்கு மறிவுடையமேலோர்கள்
வாழியெனச்சொல்லு மறை. (எஎ)

எல்லாம்வல்லானிறைவ னென்றுணர்ந்தார்போ
ன்றசில, பொல்லாருருவாய்ப் புகழ்வார்முன்-நில்லா
னென், றோதுகின்றாரந்த வுணர்ச்சியவர்க்கிந்தபொ
ரு, ளியாதுகொலோயானறிகி லேன். (எஅ)

தெய்வநிலையுமது செய்தொழிலுந்தேர்ந்தமட்டின்
மெய்வழக்கர்பல்லோர் விளம்புவார்-சைவ
முதலாயபல்சமய மூர்த்திகளாய்வேறு
மதலான்மற்றோர்துணையின் றால். (எகூ)

தான்பெற்றசேயிற் சகலவுயிரையுமெண்
ணுன்பெற்றவுண்மை யசத்தியமே-வான்பெற்ற
போதுமொருபொய் புகலாதார்க்கேயருட்சீர்
மீதுவருந்தீரா விருப்பு. (அ௦)

கோடிக்கொருமனிதன் கோமானருட்டிருக்கூத்
தாடிக்கதியடைதற் காசிப்பா-ஞடித்
திரிவார்கள்கோடியிலோர் சீராளன்ருனே
பெரிதாமப்பேறு பெறும். (அக)

அருட்சித்திவேண்டுகிலா ராரோனுமன்னோர்
மருட்சித்தமெய்தியபுன் மாந்தர்-தெருட்சித்தர்
தங்குழுவிற்போய்த்திரும்புந்தன்மையடையார்சகத்தி
லெங்குமிகழ்ச்சியுண்பா ரே. (அஉ)

பத்தியிடைமுயன்று பார்முழுதும்போற்றவருட்
சித்திபுரிந்தோரே சிரியோர்-முத்தி
யடைந்தார்களானலு மன்னவர்க்கொப்பாகா
ரிடைந்தார்க்குவகைநல்கா ரோல். (அங)

நானிலத்துமாந்தர் நகைப்பநலங்குலைந்து
மேனிலத்துத்தேவர்கட்கு மேவரிதா-நானிகழ்த்து
மெய்யருட்சிறெய்தியதா வீருப்புப்பேசுகின்ருேர்
பொய்யர்கட்கெல்லாந்தலைப்பொற் பூண். (அச)

உள்ளமறிய வுட்லாதியமூன்றும்
வள்ளலுக்கென்றீந்துவக்கு மாதவர்பாற்-கள்ள
மொருசிறிதுஞ்சேரா தொருக்காலுறினு
மருளினுக்கேசாட்சி யது. (அரு)

நல்லார்பலர்க்குமுத்தி நல்கவல்லஞானத்தோன்
பொல்லார்குலமுழுதும் போக்கலா-மல்லாரும்
பாழிநெடுங்கைப் பகடேர்வழுதிமெச்சுங்
காழிநகர்ச்சேயே கரி. (அசு)

ஓர்சமையத்தோர்பா லுடையானருட்பெருக்கஞ்
சேர்சமையந்தோறுமற்றைச் சேகரத்தார்-கூர்சளத்
தா, லானினைத்தஞ்சி யலமருதலாழ்கடல்சூழ்
மாநிலத்துத்தொல்லை வழக்கு. (அஎ)

கொல்லுஞ்சமயம்விட்டுக் கொல்லாச்சமயமதிற்
செல்லுமவர்க்குமுத்திச் சீருண்டா-நல்லுணவு
கொள்ளுநெறியைவிட்டுக் குக்கலுணவுண்ணுநெறி
நள்ளுநருக்கெய்து நரகு. (அஅ)

இத்தெய்வமேபரமென் றெண்ணியுளைப்போர்க்கு
மெய்த்தெய்வமாண்மை விளைப்பதுண்டே-லெத்தெ
ய்வ, மாவதுவுமாராயி லந்தப்பரமாமென்
றேவறச்சொல்வார்க்குதவா தோ. (அகூ)

பரமேயனைத்துமெனப் பாடுகின்றவேதத்
துரமேயுரமென் றுணர்ந்து-சிரமீது
மெய்யடியார்பொற்றுள் விளையாரப்பெற்றேரோ
வையமிகவாழநினை வார். (கூ௰)

எந்தநிலைவிட் டிழிந்தாலுமீசனருள்
வந்தடையவேண்டுமென வாஞ்சிக்கு-மந்த
நிலைதவறவொண்ணாது நிச்சயமாச்சொல்வே
னலைவொழியவேண்டு மகம். (௬௧)

குறியைக்குறித்தாற் குறியிறந்தஞான
நெறியிடைபோய்ச்சித்த நிலைக்கு-மறியாமை
முற்றியவரந்நிலையை முன்பற்றவேண்டுமிருட்
பெற்றியினாற்றேய்வார் பிழை. (௬௨)

எவ்வுருவத்தேனு மிதயமிகநாடி
லவ்வுருவங்கைக்கொண் டவிருமே-வெளவுநெறி
யத்தனைக்குமாதரமா யாராலுங்காண்பரிய
சித்தனெனநின்ற செயல். (௬௩)

வல்லானருட்பெருஞ்சீர் வாஞ்சித்தமாதவரைப்
பொல்லாவினைக்கொடும்பேய்புண்படுத்து-மல்லாதா
ர், பாடாணத்துற்ற பழையபுழுவினம்போல்
வாடாதுவாழ்வார் மகிழ்ந்து. (௬௪)

தற்பரத்தைநாடித் தவம்புரியுந்தக்கோருக்
கற்பருறவுசற்று மாகாதே-சொற்பனத்து
மெல்லாமதன்செயலென் றெண்ணியிறுமாக்கும்
வல்லாண்மையைக்குறுக்கு வார். (௬௫)

உயிரொன்றுடலொன் றுலப்பில்பரமொன்றென்
றயிரொன்றுணர்வா லறியார்-செயிரொன்று
தத்துவங்களாய்ந்து தயங்குவாரன்னவர்தம்
பித்துநமக்காகாப் பிழை. (௬௬)

ஒன்றென்றிரண்டென் றுரைசெய்வாரொன்றிரண்டு
மன்றென்றுசில்லோ ரறைகுவா-ரொன்றென்றுங்
கள்ளமறப்போற்றுநர்க்குக் காணரியமெய்யருட்பே
றுள்ளபடிதானே யுறும். (௬௭)

மங்கலமில்லா மகளுமழலைமொழிச்
செங்கனிவாய்ச்சேய்நலமில்சீர்வீடும் - பொங்கருட்
பே, றேற்றுவக்கைக்கானதவமில்லாத்துறவோனுஞ்
சாற்றுகைக்கொன்றுகுந் தரம். (௬௮)

கல்விக்கடலைக் கடந்துகளிகூரு
நல்விற்பனர்க்குதிக்கு ஞானத்தைப்-பல்விதத்து
மாராய்ந்தறியி னழியாப்பிரானருட்செஞ்
சீராகுமியாவுமென்ப தே. (௬௯)

மெய்யேமெய்யாகி விரிகடல்சூழ்மேதினியிற்
பொய்யேபொய்யாகப் புலர்வார்க்கு-மையேழுஞ்
சிந்தாமணியுமிரு செந்நிதியுந்தேனுவும்வெண்
டந்தாவளமுஞ் சளம். (௭௰)

செம்பனையதாழுலகோர் செல்வந்திரண்டவெள்ளித்
தம்பமுறழுந் தமிழ்க்கல்வி-யம்பரத்தி
லோங்குங்கனகவரை யொப்பாமுயர்பிரம
மாங்குரவனார்கண் ணருள். (ருக)

பரிதிசிவனுமைமால் பாழிநெடுங்கைக்
கரிமுகன்சேயென்னக் கழறும்-பெரியநெறி
யாறுமவைதீர்ந்த வதீதமுநன்றுகுமெனக்
கூறுநரோநந்தங் குரு. (ருஉ)

சிஃறேயஞ்சுற்றித் திரிந்தாலுஞ்செந்தமிழாற்
பஃறேவும்போற்றிப் பணிந்தாலுங்-கஃறேடுஞ்
சித்தருக்குமேலாய சீர்படையார்சிந்தையருள்
வைத்தவர்க்குத்தானே வரும். (ருஙு)

வத்துநிலையுணர்ந்து வாயாற்பிதற்றுநர்க்குச்
சித்துவிளக்கந் திகழாதே-முத்துறழு
நெஞ்சால்வடிவமொன்றை நித்தமுஞ்சிந்திப்பவருக்
கெஞ்சாமலுண்டாகுமே. (ருச)

காமத்தும்பொல்லாக் கலியாற்கயங்குநர்க்கு
நேமத்தினுக்கு நெடுந்தூரந்-தாமருளை
நாடிமுயல்கை நடுத்தோன்றிடுமாகில்
வாடிவிடமாட்டார் மருண்டு. (ருரு)

எந்தத்துயரினத்து மீனரிடம்போயிரக்கு
மந்தத்துயரோ யதிகோரஞ்-சந்தக்
கவியினையுமிக்கிகழ்ந்து காஞ்சனத்தைப்போற்றி
யவிவுறுவார்கூட்டமிக லால். (௱௬)

நல்லார்மிடிப்படவு நாயனையாரின்புறவும்
வல்லான்செய்கின்ற வழக்கெண்ணி-யெல்லாரு
மொன்றுபோற்றீமை யுஞற்றுரீ துண்மையென்கை
யென்றுமுலகிற்றுலங்கு மே. (௱௭)

பார்ப்பாரிரப்போர் படைமன்னர்தண்டிப்போர்
கூர்ப்பார்மதிவணிகர் கொண்டுவிற்போ-ரோர்ப்பாலர்
தாமேமழைவகுத்தோன் றண்ணருளாற்சந்ததமும்
பூமேலுணவுவிளைப் போர். (௱௮)

இன்னசெயலரிதா மென்றிசைத்தற்கெட்டாத
முன்னவன்றன்மெய்யருளை முன்னுவார்க்-கின்னல்
பலவுண்டாமாஞலும் பார்த்திருக்கும்போதே
யலகின்றியநலமுண் டாம். (௱௯)

வாதவூரானை வழுதிவையையாற்றினிடை
மோதலுறுநாளின் மூதுலகோ-ரோதம்
பகர்ந்திகழ்ந்துமன்னவனுட் பத்திகெட்வில்லை
நிகழ்ந்ததுமேலுள்ள நிசம். (௱௰)

பத்திபுரிந்துய்ந்தோர் பாருலகிற்பற்பலருண்
டத்திருக்கூட்டத்துளெவரானுலு-மெய்த்திறல்சேர்
நாவிற்கரசனென நைந்திலர்பின்னுளினுமோர்
மாவிற்றிகழ்ந்தான் வரன். (௱௰க)

சண்பைநகரித் தமிழ்விரகன்போற்றவத்தின்
பண்பறியுமுன்னே பரன்வந்து-விண்புரப்பார்
தங்களுக்குமெய்தாத் தனியாண்மைநல்கலுற்று
ரெங்களுலகத் திலே. (௱௰உ)

தானேபரமன் றடுத்தாண்டசுந்தரனு
மானேருண்கண்ணார் மயக்கத்தா-லேனேனென்
றெல்லவருங்கேட்பவிழி யின்றியலைந்தானென்று
லல்லலுறுதுய்குநரிங் கார். (௱௰௩)

தண்ணார்குருகைச் சடகோபன்றமைப்பூங்
கண்ணனருட்பெருக்கங் கண்டாற்போன்-மண்ணாட்
டின், மற்றுமவனை வணங்கினருங்கண்டாரொன்
றெற்றுநரும்பற்பலருண் டே. (௱௰௪)

பூங்கமலக்கண்ணனன்பர் போற்றும்புகழ்முனிவ
னுங்கவரைக்காப்பதெண்ணி யையகோ-வேங்கடத்தி
ற், பொல்லாக்கவுமாரர் போர்விளையுமாறுசெய்தா
னெல்லாருஞ்சொல்வ திது. (௱௰௫)

சைவமுதலாகச் சாற்றுகின்றசட்சமயத்
தைவகையுமொன்ருயு மஞ்சாமன்-மெய்வலியால்
வீரவயிணவன்ருன் மேதினியில்வாழ்கின்ரு
னியாரறியாரிந்த விசை. (௱௰௬)

கன்றை யெடுத்துக் கனிமீ தெறிந்தொருக்காற்,
குன்றைக்குடைப்பிடித்த கோமான்ருண்-டொன்
றை, யிரண்டாக்கு மேழைமையோ ரிங்குமங்கு மன்
னேன், சரண்டானளந்த தெண்ணுதார். (௱௰௭)

மங்கலநூல்பூட்டு மனையிடத்தும்வாழ்விழந்திட்
டங்கதனைக்கொய்யு மகத்திடத்து-மங்க
ணுலகத்தார்போற்ருெருவ னுண்டேயவன்ருண்
மலரிற்போமேலோர் மனம். (௱௰௮)

மாறுபடாத மறைநூல்வகுத்தநெறி
யாறுமொருகுரவ ஞனமாத்-தேறுநரா
யாவர்பகைப்பா ரொவ்வாயவரிகழ்வார்
பூவலயத்தன்னோர் பொது. (௱௰௯)

கண்ணறியத்தோன்றுங் கதிரோகடவுளென்னு
மெண்ணமிலாதா ரெவரோனு-மண்ணதனிற்
சின்னாள்விளக்கமுற்றுத் தீயொனும்பேர்பொறுத்திட்
டொன்றூரான்மாய்வா ரொருங்கு. (௱௨௰)

மாயையருட்சத்தியென வல்லோர்வகுக்குமொரு
தாயையிகழுஞ் சழக்கர்தாங்-தியை
யறலைத்தணந்திட் டடிசிலமைக்குந்
திறல்விழைவார்போலுஞ் சிலர். (ஈஉக)

அன்னமென்பான் றன்பா லமுதென்பான் வாதமி
ட்டுப், பின்னவிதம் பேசுமொரு பெற்றியொப்பா-
மின்னதுதா, னென்றெய்வமென்பாற் கிதுதெய்வமா
மதுதே, வன்றென்றுரைப்பா னகம். (ஈஉஉ)

யான்றெய்வமாமென் றியம்பியிறுமாப்போன்
றன்றெய்வமென்றிடலுந் தன்மமே-வான்றெய்வ
முண்டென்பவர்க்குறவாயூரொழித்தின்றென்பவரை
க், கண்டெங்கும்வெல்லல் கடன். (ஈஉ௩)

குழவியுருவாய்க் குவலயத்தில்வந்த
பழமையறியாத பலருந்-தழலிற்
கொடிதாய்ப்புனலிற் குளிர்ந்ததெய்வந்தாமென்
றிடியேறொத்தார்ப்ப திழிவு. (ஈஉச)

எத்தேயத்தெச்சமயத் தியாவரருள்பெற்றாலு
மெய்த்தே வருட்செயலின் வேறல்லப் - பொய்த்தே
வொன், றிங்குவகுத்தாலு மிருக்கைக்கிடமில்லை
யெங்குநிறைந்ததது வே. (ஈஉ௫)

ஏயநெடுநாட்சென் றியாதேனுமோர்சமய
மாயவுலகினிடை வந்தாலுந்-தூயமறை
சொல்லுநெறியாறின் றொடர்பாமுடியுமன்றி
யொல்லும்வகையில்லை மற்றொன்று (௱௨௬)

சங்கரப்பேர்மாமுனிவன் சட்சமயத்தோர்களுந்தம்
புங்கவனென்றேத்தப் பொதுவானா-னங்கதுகண்
டுள்ளாருங்கேட்டவரு மொன்றையொப்பிமற்றவற்
றை, யெள்ளாண்மையுற்றவித மென். (௱௨௭)

சக்கரைவட்டன்ன சமயங்களாறிலொன்றை
மிக்கதெனப்பற்பலர்சொன் மேதினியி-லொக்கநல
மென்றேத்துவார்க்கிகழ்ச்சியெய்தாதிராதெனினும்
வென்றேதந்தீர்தரலா மே. (௱௨௮)

ஆறுநெறியுமெய்மை யாமெனலுமன்றெனலுங்
கூறும்விதமேழாய்க் குலாவுமே-வேறுவழி
காட்டுவானுண்டாயிற் காசினியோர்வாரமெனக்
கூட்டுதினமு மெட்டாகும். (௱௨௯)

மாதமுதல்வெவ்வேறு வைத்துக்கொண்டார்சிலரு
மாதவனுட்டொட்டெழுநா ளாகவே-யோதலிடை
மாறுபட்டாரில்லையிது மண்ணுலகும்விண்ணுலகுங்
கூறுமிறைகாட்டுங் குறி. (௱௩௰)

வாயாலருந்தன் மகளிர்மகப்பெறுத
னோயாதியாலிறத்த னாலினத்தின்-றுயாங்
குரவற்பழிச்சலன்ன கொள்கைகளிலொத்தா
ரரவத்துந்திய மதத்தார். (௱௯௧)

ஆண்டான்வகுக்கு மவையவத்துளோர்சிறிது
வேண்டாமென்றெள்ளும்வெறுஞ்சமயம்-பூண்டாரு
ம், வாழுலகிலெந்த வகைநிறுவக்கூடாதோ
வாழுமறிவுள் ளவர். (௱௯௨)

பல்கோடியாமுலகும் பன்னூலும்பல்லுயிரு
நல்கோகையாதியவா நற்குணமுங்-கொல்கோர
மில்லாதமாதவமு மியாவமொடுத்தோது
மெல்லாமுமீசனருளே. (௱௯௩)

மனச்சாட்சி.

எத்தனையோநூல்க ளிருக்கவருளாட்சியென்னு
மித்தகையநூலிசைத்த தென்றனது-சித்தமிசை
வள்ளுவன்போல்வந்து மறுபிறப்பெய்தாதெனுஞ்
சொல், விள்ளுநலந்தோய்ந்த தெய்வமே.

அருளாட்சி முற்றிற்று.

---

தெய்வமே துணை.



உ

குருவே துணை.

# பலநாமக்காரன் வகுப்பு.

## குழிப்பு.

தந்தந்-தனந்தனன-தந்தந்-தனந்தனன
தந்தந்-தனந்தனன-தானத் தான.

அண்டங்களுஞ்சகல பிண்டங்களுஞ்சுருதி
யந்தங்களுந்தெரியு ஞானக்காரனு
மங்கிங்கெனுஞ்சமைய வன்பும்பொருந்தியவை
யன்றென்றுநின்ற முழுமோசக்காரனு
மஞ்சிந்தியங்களறநெஞ்சொன்றுகொண்டுணரு
மங்கங்கொளும்பழைய நீதிக்காரனு
மண்டுங்குழந்தையென நின்றுந்தொழும்புனித
ரன்றுய்ந்திடும்படிசொன் மோனக்காரனு
மஞ்சங்களொஞ்சுநடை மென்கொம்பெனுங்கணிகை
யன்பொன்றுநெஞ்சினிலும் வாழ்சொக்காரனு
மந்துண்டிடுஞ்சிறுநெலென்றுந்தளர்ந்துதொழு
தஞ்சும்பெருந்தவர்தம் வேலைக்காரனு

மன்றுண்டருங்கவிஞ ரின்றின்றெனுஞ்சிதட
ரம்பொன்பெறும்படி செய்கேலிக்காரனு
மம்புங்கரும்பவன முந்திங்களுங்கதிரு
மங்கொண்டலும்புனையு மேன்மைக்காரனும். (௮)

வெண்டங்கமும்பழுதில் செந்தங்கமும்புவியை
வென்றுந்துலங்கவிடு மாயைக்காரனும்
வெம்புங்கொடும்புலையர் நெஞ்சந்திறந்துமகல்
வென்கண்டும் விஞ்சுமவர் நேயக்காரனும்
விண்கொண்டுசென்றுவருதுங்கம்பெறுஞ்சிலரும்
விந்தன்றகண்டமெனு மோசைக்காரனும்
விம்பங்களும்பொருவில் கும்பங்களுங்கமழு
மென்றொங்கலுங்குலவு பூசைக்காரனு
மிண்டும்பதங்கள்பல வுந்தந்திகழ்ந்தறிவு
மிஞ்சுஞ்சுகந்தரும் விநோதக்காரனும்
விண்டிங்கறிந்தவர்க ளின்றென்றிருந்தநிலை
மின்கொண்டிலாந்தவெகு வேதக்காரனும்
வெந்துங்குளிர்ந்துமொளிதங்குஞ்செழுஞ்சுடர்க
ளின்கண்களென்றடையு மேனிக்காரனும்
வெங்கன்றுலங்கிடவு மன்சென்றிரங்கொளிய
விந்தொஞ்சவுஞ்செயுந லாடற்காரனு (௯)

மண்டங்கினங்களுண வுண்டுண்டலைந்துதுயில்
வந்தங்கயர்ந்தெழல்செ யார்வக்காரனும்
வன்பும்புயங்கநிகர் தெம்புங்கொளும்பிசிதர்
மங்குந்திறன்புரியு மாண்மைக்காரனு
மன்றம்புகுந்திணையி லெண்சந்தமும்புகலும்
வண்கொண்டுறும்புலவர் பாடற்காரனும்
வஞ்சம்புரிந்தொருவர் நெஞ்சங்கலங்கவிடும்
வம்பொன்றநின்றசிலர் நாசக்காரனு
மஞ்சுந்தொலைந்துபகி ரண்டங்களுங்கருகி
வந்துந்தயங்கவரு கோபக்காரனு
மண்டன்புகொண்டுருகி நின்றெம்பருங்கொளொரு
வன்றஞ்சமென்பவர்கண் மோகக்காரனும்
வண்டும்பிளந்தவடு வுந்தங்குகண்பொருமுன்
வன்கண்செயுந்தவர் சினேகக்காரனு
மைந்தன்பிறந்திடுதலெந்தம்பவங்களெனு
மந்தங்கொளுங்கசடர் தூரக்காரனு (ஜ)

மிண்டம்பெரும்புதலின் முங்குங்கருந்தலைய
தென்றிங்குழன்றிடுமு ளுள்கைக்காரனு
மென்பெண்டுமைந்தர்துணை வன்பந்தினங்களென
வின்றுஞ்சொலுங்குலினர் சோரக்காரனு

மின்பம்பிறந்துவினை யுந்துன்பமுந்தவிர்வ
தென்றென்றுகெஞ்சுமவர் பார்வைக்காரனு
மென்புங்கொடும்புலவு நன்றென்றருந்துமவ
ரெண்கொண்டநெஞ்சையிகழ் பாதக்காரனு
மெண்குங்குரங்குநரி யும்பன்றியும்புலியு
மெஞ்சுங்குணங்கொள்பவ ரோசற்காரனு
மிந்துந்துலங்குமுடி வுங்கொண்டலுந்திகழு
மென்றுஞ்செலுங்ககன வீதிக்காரனு
மெந்தெந்தமந்திரமு மொன்றென்றுணர்ந்தவர்க
ளெந்தந்தையென்பவர்சொல் வாய்மைக்காரனு
மிங்குந்துணிந்தவர்கள் கண்டுய்ந்துதெண்டனிட
வெங்கெங்குநின்றபல நாமக்காரனே. (க)

தெய்வமே துணை.

உ

குருவே துணை.

# பொதுவான தெய்வவகுப்பு.

## குழிப்பு.

தனதனத்-தனதனத்-தனதனத்-தனதனத்
தனதனத்-தனதனத் தனதான தையன.

உலகமுற்றொருதனிக் குடையில்வைத்தரசியற்
றுரிமையிற்சிறிதுமெய்ப் படையாமலுள்ளது

முணர்வினிற்பெரியரைத் தமரெனத்தழுவிநெக்
குருகிநிற்பவர்கள்சொற் படியாடல்செய்வது

முடல்கொழுப்பதுநினைத் தளவில்பற்பலவிதத்
துயிர்செகுப்பவர்குலத் தினர்நாளும்வைவது

முறுபடைப்பொலிவுநற் றுணையெனத்துணிவுபெற்
றெழுகுதுர்ச்சனரிருட் குடைநீறவெல்வது (௧)

மிலகுநற்சுடரிரட் டையுமமைத்துலகினுக்
கிருளறப்புரியுமெய்ப் பொருளானசெய்யது

## ௱௭௮ பொதுவான தெய்வவகுப்பு.

மிருவினைக்கயிறிசைத் துயிர்முழுக்கவுமசைத்
திலம்விடுப்பவர்களுக் கநுபூதிநல்கலு
மிகபரத்தினும்விருப் பறுமுழுத்தவசிகட்
கெனதறச்சுகம்விளைத் தவரூடுபுல்வது
மியன்முதற்பகருமுத் தமிழினிப்பெனுமவர்க்
கிணையின்மெய்ப்புகழுறக் கவிகோடிசொல்வது. (௧)

மலகில்பற்பலவகைச் சமையம்வைத்தொருவர்மற்
றவரைவெட்டிடினுமொப் பிடுதீமைகொள்வது
மறிவினுக்கறிவெனப் பலவிதச்சுருதிமிக்
கறைதரப்புகல்வதற் கமையாமலெய்வது
மணிபணிக்கனதனத் துணைமிசைத்துணிநெகிழ்த்
தணையினிற்புணர்வதற் குருகார்கள்செல்வமு
மளவிலுற்பவமுயிர்க் குளதெனத்தெளிதலுற்
றவைகெடக்குருவினைப் பணிவார்கள்கல்வியுங் (௨)

கலகமிட்டெதிர்வரத் தருமவர்க்கெமனெனக்
கதிரயிற்படையெடுத் தெறிவார்கள்வௌவலுங்
கணவனுத்தரவினைச் சுருதியிற்பெரிதெனக்
கருதுகற்பினர்மொழிக் குறவாகிவைகலுங்

கடலுடுத்திடுமெகட் குதவுநற்றருமமெய்க்
கதியினுக்கணியெனப் பகர்வார்களுள்ளமுங்
கருணையைத்துணையெனக் கொடுமூதற்றவமதிற்
கனியுமுத்தமர்சொலப் பொதுவானதெய்வமே. (க)



# தெய்வமே துணை.



உ

முருகக்கடவுடுணை.



இப்புத்தகத்தையபேட்சித்து பத்திரிகைபெற்றுக்
கொண்டு பொருளுதவிசெய்தவர்க
ளுடைய பெயர்கள்.



## தேவகோட்டை.

| | | ரூபாய். |
|---|---|---|
| வீ-ர-லெ-சிதம்பரஞ்செட்டியாரவர்கள் | ... | ௲௱௩௰ |
| வீ-ர-ராம-சிதம்பரஞ்செட்டியாரவர்கள் | ... | ௪௱௫௰ |
| ராம-அரு-ராம-அருணாசலஞ்செட்டியாரவர்கள் | ... | ௱௰ |
| ராம-மெ-ராம-முத்தய்யா-செட்டியாரவர்கள் | ... | ௫௰௫ |
| அ-ழ-சுப-முத்தையாசெட்டியாரவர்கள் | ... | ௨௱ |
| ரா-ம-மெ-சித-வயிரவன்செட்டியாரவர்கள் | ... | ௫௰ |
| ரா-ம-மெ-அரு-இராமநாதன்செட்டியாரவர்கள் | ... | ௪௰ |
| அழ-சுபபழ-சிதம்பரஞ்செட்டியாரவர்கள் | ... | ௭௰௫ |
| ரா-ம-மெ-லெ-அருணாசலஞ்செட்டியாரவர்கள் | ... | ௪௰ |
| மொ-மு-முத்தையாசெட்டியாரவர்கள் | ... | ௨௰௫ |
| அழ-அரு-பெத்தபெருமாள்செட்டியாரவர்கள் | ... | ௬௰௫ |
| அ-ரு-லெ-இராமசுவாமிசெட்டியாரவர்கள் | ... | ௩௰௫ |
| எ-பெ-ரி-நாச்சியப்பசெட்டியாரவர்கள் | ... | ௫௰ |

## காரைக்குடி.

| | | ரூபாய். |
|---|---|---|
| மு-ரு-லெ-கிஷ்டிணன்செட்டியாரவர்கள் | ... | ௲௭௰௫ |
| மு-ரு-லெ-பெரியநாராயணன்செட்டியாரவர்கள் | ... | ௯௰௫ |
| மு-ரு-லெ-சின்னநாராயணன்செட்டியாரவர்கள் | ... | ௲௪௰௫ |
| பெ-ரிக-சின்னையாசெட்டியாரவர்கள் | ... | ௲ |
| மெ-பெரி-மெய்யப்பசெட்டியாரவர்கள் | ... | ௩௰௫ |
| கதெ-கறுப்பன்செட்டியாரவர்கள் ... | ... | ௨௰ |
| கதெஅரு-இராமசுவாமிசெட்டியாரவர்கள் | ... | ௫௰ |
| சி-த-ம-வெ-வெங்கடாசலஞ்செட்டியாரவர்கள் | ... | ௰௬ |
| அ-முத்து-க-கறுப்பன்செட்டியாரவர்கள் | ... | ௰௨ |
| சிவ-அ-சிவராமன்செட்டியாரவர்கள் | ... | ௰௨[illegible] |
| நா-லெ-சிதம்பரஞ்செட்டியாரவர்கள் | ... | ௰௪ |
| சி-த-நாராயணன்செட்டியாரவர்கள் | ... | ௰ |
| வெ-ரா-ம-வெங்கிடாசலஞ்செட்டியாரவர்கள் | ... | ௰௨ |
| நாமு-சுப்பிரமணியஞ்செட்டியாரவர்கள் | ... | ௮௰௫ |
| ராம-வீரப்பசெட்டியரரவர்கள் ... | ... | ௰௫ |
| சு-ராம-இராமன்செட்டியாரவர்கள் ... | ... | ௨௰௫ |
| ப-ழ-ரா-ம-பழனியப்பசெட்டியாரவர்கள் | ... | ௰ |
| அழ-சா-ரா-ம-முத்துராமன்செட்டியாரவர்கள் | ... | ௰ |
| மெ-மெய்யப்பசெட்டியாரவர்கள் ... | ... | ௰௫ |
| நெ-ராம-நெல்லையான்செட்டியாரவர்கள் | ... | ௰ |
| மெ-ரா-ம-வெ-இராமநாதன்செட்டியாரவர்கள் | ... | ௰ |
| அ-ரு-அண்ணாமலைசெட்டியாரவர்கள் ... | ... | ௨௰ |
| மு-ரு-ரா-ம-ஆவிச்சிசெட்டியாரவர்கள் | ... | ௪௰ |

| | ரூபாய். |
|---|---|
| பெ-ரி-ஆ-அழகப்பசெட்டியாரவர்கள் ... ... | ௰ |
| ஆ-ரா-ம-வெ-மாணிக்கவாசகஞ்செட்டியாரவர்கள் | ௰௨ |
| மெ-செ-சபாபதிசெட்டியாரவர்கள் ... ... | ௨௰ |

## கானுடுகாத்தான்பட்டி.

| | |
|---|---|
| சா-அ-அண்ணுமலைசெட்டியாரவர்கள் ... | ௪௰ |

## இராயபுரம்.

| | |
|---|---|
| வெ-மு-முத்தையசெட்டியாரவர்கள் ... ... | ௱ |
| தஞ்சாவூர்ச்சில்லா சேந்தன்குடிப் பாளையப்பட்டுச் சமீன்தாரவர்கள் ... ... ... | ௩௰௧ |
| நாகவெளிப்பாளையநகரத்தாரவர்கள் ... | ௨௱ |
| பண்டகசாலைத்தரகு சுப்பராமையரவர்கள் ... | ௩௰௫ |
| மு-ரு-ரா-ம-முத்தையாசெட்டியாரவர்கள் ... | ௨௰ |
| சென்னைப்பட்டினம் நகரத்தாரவர்கள் ... | ௨௱ |
| ஏகவல்லியம்மன்வீதி இராசசேகரமுதலியார் ... | ௰ |

## கோனுபட்டு.

| | |
|---|---|
| சொ-ரா-ம-சொக்கப்பசெட்டியாரவர்கள் ... | ௫௰௫ |

## ஆற்றங்குடி.

| | |
|---|---|
| ரா-ம-குமரப்பசெட்டியாரவர்கள் ... ... | ௰ |
| பள்ளத்தூர்நகரத்தாரவர்கள் ... ... | ௰௫ |
| கண்டனூர்-நகரத்தாரவர்கள் ... ... | ௰௩ |
| புதுவயல்-நகரத்தாரவர்கள் ... ... ... | ௰௧௲ |
| கோட்டையூர்-நகரத்தாரவர்கள் ... ... | ௰௫ |

| | ரூபாய். |
|---|---|
| அரிமழம்-நகரத்தாரவர்கள் ... ... | எ௰ |
| அரியக்குடிவடக்கூர்-நகரத்தாரவர்கள் ... ... | ௰௫ |
| புதூர்-ராமவயி-முத்தையாசெட்டியாரவர்கள் ... | ௰ |
| புதூர்-வயிநாகராம-நாகப்பசெட்டியாரவர்கள் ... | ௰ |
| வேலாயுதம்பாளையம-கருப்பவேலுக்கவண்டரவர்கள் | உ௰௫ |
| பாப்பாகுளம்-பழனிக்கவண்டரவர்கள் ... | ௰ |
| வேலாயுதம் பாளையம் - செம்மாண்டக்கவண்டரவர்கள் ... ... ... ... | ௰ |
| வேலாயுதம்பாளையம் செல்லியக்கவண்டரவர்கள் ... | ௰ |
| வேலாயுதம்பாளையும் குமாரசுவாமிபத்தரவர்கள் ... | ௰ |
| சுப்பராய பரதேசியாரவர்கள் ... ... | ௰ |
| உடுமலைப்பேட்டை அங்கப்பசெட்டியாரவர்கள் ... | ௰ |
| வண்டிப்பாளையம் மல்லையரவர்கள் ... ... | ௰ |
| ஷை யூர்-இராமசுவாமிமுதலியாரவர்கள் ... | ௰ |
| ஷை யூர்-அப்பாவுபிள்ளையவர்கள் ... ... | ௰ |
| ,, நடராசபிள்ளையவர்கள் ... ... | ௰ |
| ,, சாமிநாதமுதலியாரவர்கள் ... ... | ௰ |
| ,, இரத்தினபிள்ளையவர்கள் ... ... | ௰ |
| கூடலூர்-அப்பாவுபிள்ளையவர்கள் ... ... | ௰ |
| வண்டிப்பாளையம் கிராமமுனிசீபு இராசப்ப முதலியாரவர்கள் ... ... ... ... | ௰ |
| சாராமணிக்குப்பம் பச்சையப்பநயினாரவர்கள் ... | ௰ |
| வீராரெட்டிபாளையம் முத்துரெட்டியாரவர்கள் ... | ௰ |
| சூரப்பநாய்க்கன்சாவடி நாகப்படையாச்சியவர்கள் | ௰ |

| | ரூபாய். |
|---|---|
| திருப்பாதிரிப்புலியூர் சொக்கலிங்கஞ்செட்டியாரவர்கள் ... ... ... ... | ம |
| செங்காடு வெங்கடசுப்பாரெட்டியாரவர்கள் ... | உம |
| திருவயிந்திரபுரம் சீனிவாசபிள்ளையவர்கள் ... | ம |
| திருமாணிக்குழி-முத்துகிஷ்டிணரெட்டியா ரவர்கள் | ம |
| விராரெட்டிபாளையம் நாராயணபிள்ளையவர்கள் ... | ம |
| மலப்பெருமாளகரம் இராமரெட்டியாரவர்கள் ... | ம |
| அபிஷேகபாக்கம் அச்சுதரெட்டியாரவர்கள் ... | மஉ |
| நெல்லிக்குப்பம் கொண்டாரெட்டியாரவர்கள் ... | ம |
| காராமணிக்குப்பம் புருஷோத்தம ரெட்டியாரவர்கள் ... ... ... ... | ம |
| ஷை யூர்-நமசிவாயபிள்ளையவர்கள் ... ... | ம |
| ஷை யூர்-வேலாயுதநயினரவர்கள் ... ... | ம |
| ஷை யூர்-குமாரசுவாமிநயினரவர்கள் ... | ம |
| சின்னப்பகண்டை வெங்கட்டராய ரெட்டியாரவர்கள் ... ... ... ... | மஉ |
| நெட்டைப்பாக்கம் குப்புரெட்டியாரவர்கள் ... | ம |
| திருப்பாதிரிப்புலியூர்-லெட்சுமணமுதலியாரவர்கள் | மச |
| சிறுபந்தாட்டு நாராயணரெட்டியாரவர்கள் ... | மஉ |
| வளவனூர் சுப்பராயசெட்டியாரவர்கள் ... | ம |
| ஷை யூர்-விநாயகபிள்ளையவர்கள் ... ... | ம |
| ஷை யூர்-அழகானந்த வுடையாரவர்கள் ... | ம |
| கோலியனூர்-புருஷோத்தமரெட்டியாரவர்கள் ... | ம |
| கோலியனூர்-வரதப்பசெட்டியாரவர்கள் ... | மஉ |

| | | ரூபாய். |
|---|---|---|
| ஷை யூர்-கொண்டப்பசெட்டியாரவர்கள் | ... | ௰௯ |
| ஷை யூர்-மேஸ்திரி-ரெங்கயநாய்க்கரவர்கள் | ... | ௰ |
| சோழிப்பாக்கம்-அழகப்பக்கவண்டரவர்கள் | ... | ௰ |
| சாலையூர்-கரிவரதப்பிள்ளையவர்கள் | ... ... | ௰ |
| ஷை யூர்-மொட்டையக்கவண்டரவர்கள் | ... | ௰ |
| கோலியனூர்-இராமரெட்டியாரவர்கள் | ... | ௰ |
| மோக்ஷகுளம்-முத்துநாராயணரெட்டியாரவர்கள் | .. | ௰ |
| வேட்டவலத்துப்பண்டாரியாரவர்கள் | ... ... | ௨௰ |
| காம்பட்டு-பெரியதம்பிக்கவண்டரவாகள் | ... | ௰ |
| வரகூர்-சண்முகம்பிள்ளையவர்கள் | ... ... | ௰ |
| ஷையூர்க் கணக்கு-நமசிவாயபிள்ளையவர்கள் | ... | ௰ |
| நாயடியான்மங்கலம் வையாபுரிஐயாஅவர்கள் | ... | ௰ |
| நாரதன்பூண்டி-குப்பு நாய்க்கரவர்கள் | ... | ௰௨ |
| இராயவேலூர்-முருகப்பசெட்டியாரவர்கள் | ... | ௰ |
| ஷை யூர்-சுப்பிரமணியமுதலியாரவர்கள் | ... | ௰௫ |
| ஷை யூர்-ஆறுமுகசெட்டியாரவர்கள் | ... ... | ௰ |
| ஷை யூர்-அரங்கசாமிமுதலியாரவர்கள் | ... | ௰ |
| ஷை யூர்-இராசுமுதலியாரவர்கள் | ... ... | ௰ |
| வேலைப்பாடி முத்துசுவாமிமுதலியாரவர்கள் | ... | ௰ |
| புதுவை-சமர்த்தி-சீனிவாசசெட்டியாரவர்கள் | ... | ௫௰ |
| ஷை யூர்-படாங்கு வயித்திலிங்க செட்டியாரவர்கள் | | ௨௰ |
| ஷை யூர்-கூனிச்சம்பட்டு வெங்கடாசலசெட்டியாரவர்கள் | ... ... ... ... | ௫௰ |
| ஷை யூர்-கலிவி-சுப்பராயசெட்டியாரவர்கள் | ... | ௰ |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | ரூபாய். |
| முத்தியாலுபேட்டை ஆனந்தத்தாண்டவராயமுதலியாரவர்கள் | ... | ... | ... | உ௰ |
| வாக்கூர்-கரிவரதகவண்டரவர்கள் | | ... | ... | ௰ |
| ஷை யூர்-சுப்பராயகவண்டரவர்கள் | ... | | ... | ௰ |
| ஷை யூர்-ஆடியபாதக்கவண்டரவர்கள் | | ... | ... | ௰ |
| ஷை யூர்-ஆ-வரதப்பகவண்டரவர்கள் | | ... | ... | ௰ |
| ஷை யூர்-கலிவிராயக்கவண்டரவர்கள் | | ... | ... | ௰ |
| செயத்தினன்பாளையம் இராமசுவாமிக்கவண்டரவர்கள் | ... | ... | ... | ௰௩ஆ |
| சாத்தனூர்-சின்னரொட்டியாரவர்கள் | | ... | ... | ௰ |
| விழுப்புரம்-வீரட்டசபாபதிமுதலியாரவர்கள் | | | ... | ௰க |
| ஷை யூர் ஐயா ஆறுமுகமுதலியாரவர்கள் | | | ... | ௰ |
| வயலாமூர்-ரெங்காரொட்டியாரவர்கள் | | ... | ... | ௰ |
| சோம்பட்டு-கணபதிரொட்டியாரவர்கள் | ... | | ... | ௰ |
| உரத்தூர் சுப்பராயரொட்டியாரவர்கள் | ... | | ... | ௰சு |
| ஷை யூர்-தாமோதரரொட்டியாரவர்கள் | | | ... | ௰ |
| ஷை யூர்-முத்துவெங்கடபதிரொட்டியாரவர்கள் | | | ... | ௰ரு |
| ஷை யூர்-முத்துநாராயணரொட்டியாரவர்கள் | | | ... | ௰ |
| ஷை யூர்-ஏகாம்பரரொட்டியாரவர்கள் | | ... | ... | ௰ |
| சோழனூர்-சாம்பசிவ ரொட்டியாரவர்கள் | | | ... | ௰௩ |
| ஷை யூர்-அருணசலக்கவண்டரவர்கள் | | ... | ... | ௰ |
| ஷை யூர்-இராமசுவாமிரொட்டியாரவர்கள் | | | ... | ௰ |
| பீணயபுரம்-நஞ்சையரவர்கள் | | ... | ... | ௰ |
| தென்பேறு-கேசவரொட்டியாரவர்கள் | | ... | ... | ௰ |

| | ரூபாய். |
|---|---|
| புதுப்பாளையம்-தில்லைமுதலியாரவர்கள் ... ... | ௰ |
| ஷை யூர்-ஆறுமுகமுதலியாரவர்கள் ... ... | ௰ |
| விக்கிரமபாண்டி-பெரியவரதாரெட்டியாரவர்கள் ... | ௰ |
| ஷை யூர்-சீனிவாசரெட்டியாரவர்கள் ... ... | ௰ |
| ஆவுடையாப்பட்டு சுப்பராயரெட்டியாரவர்கள் ... | ௰ |
| ஷை யூர்-முத்துவசவாரெட்டியாரவர்கள் ... | ௰ |
| ஷை யூர்-முத்துரெட்டியாரவர்கள் ... ... | ௰௨ |
| ஷை யூர்-வெங்கட்டராய ரெட்டியாரவர்கள் ... | ௰ |
| கயத்தூர்-தாமோதரரெட்டியாரவர்கள் ... ... | ௰௧ |
| மண்ணுடிப்பட்டு திருக்காமிரெட்டியாரவர்கள் ... | ௰௧ |
| மதுரைப்பாக்கம்-சாம்பசிவரெட்டியாரவர்கள் ... | ௰௧ |
| ஷை யூர்-இராமசுவாமிநாய்க்கரவர்கள் ... ... | ௰௧ |
| கொத்தாம்பாக்கம்-வீரராகவரெட்டியாரவர்கள் ... | ௰ |
| இளையாண்டப்பட்டுப் பெரியதம்பிக்கவண்டரவர்கள் | ௰ |
| சேமங்கலம் - காணைக்கொண்டல்ராயரெட்டியரவர்கள் ... ... ... | ௰ |
| பொம்மையப்பாளையம்-சிவக்கியானபாலையசுவாமி.. கள் ... ... ... ... | ௩௰ |
| திண்டிவனம் இஞ்சினீராபீசு சுப்பராயமுதலியாரவர்கள் ... ... ... | ௰௫ |
| சென்னைப்பட்டினம் அமரம்பேடு சுப்பராயசெட்டியாரவர்கள் ... ... ... | ௯௰௪ |
| ஷை யூர் - ஏகவல்லியம்மன்வீதி அட்சயலிங்கமுதலியா ரவர்கள் ... ... ... | ௱௯௰ |
| ஷையார்மைத்துனர்-கனகசபைமுதலியாரவர்கள் ... | ௰ |

| | ரூபாய். |
|---|---|
| கொடிப்பள்ளம்-ஏழுமலைசெட்டியாரவர்கள் ... | சா |
| சென்னபட்டிணம்-ஐயாசாமிபிள்ளையவர்கள் ... | யரு |
| செங்கல்ப்பட்டுஜில்லா சூனும்பேடு வில்லிப்பாக்கம் கனகப்ப முத்துசாமிமுதலியாரவர்கள் ... | ய |
| கழுகுமலை-வெங்கடாசலசெட்டியாரவர்கள் ... | உயரு |
| கழுகுமலை-சங்கரபாண்டிய உபாத்தியாயரவர்கள்.. | ருயரு |
| தூத்துக்குடி-சுப்பராயபிள்ளையவர்கள் ... ... | கூருய |

# கொழும்பு.

| | |
|---|---|
| வீ-ர-ராம-முத்தையசெட்டியார்வர்கள் ... ... | ஙயரு |
| முத்துகரு-முத்தையசெட்டியாரவர்கள் ... | ஙய |
| எ-பெரி-குப்பான்செட்டியாரவர்கள் ... ... | ருய |
| கு-ப-செ-கண்ணப்பசெட்டியாரவர்கள் ... | உய |
| நாக-பெரி-வெள்ளையப்பசெட்டியாரவர்கள் ... | ஙயரு |
| நா-க-முரு-செல்லப்பசெட்டியாரவர்கள் ... | ஙயஉ௲ |
| கு-எ-வள்ளியப்பசெட்டியாரவர்கள் ... ... | சய |
| க-ரு-செ-ப-மெய்யப்பசெட்டியாரவர்கள் ... | ய |
| ஆ-ராமதா-சிவசாமிமுதலியாரவர்கள் ... | யஎ௲ |
| எ-எ-நாராயணன்செட்டியாரவர்கள் ... ... | உய |
| க-ரு-முத்துக்கறுப்பன்செட்டியாரவர்கள் ... | உய |
| கு-ழ-காளையப்பசெட்டியாரவர்கள் ... ... | யஉ௲ |
| கு-ம-லெ-ராமன்செட்டியாரவர்கள் ... ... | ய |
| ப-ழ-செ-அடைக்கப்பசெட்டியாரவர்கள் ... | ஙய |
| முத்துகபழ-அருணசலஞ்செட்டியாரவர்கள் ... | உய |
| வ-ட-ழ-சாமிநாதன்செட்டியாரவர்கள் ... ... | ய |

| | | ரூபாய். |
|---|---|---|
| மு-க-மு-பெரியண்ணன்செட்டியாரவர்கள் | ... | ௰ |
| க-ரு-பெரி-தீத்தப்பசெட்டியாரவர்கள் | ... | ௰ |
| தெ-பெ-ராமன்செட்டியாரவர்கள் ... | ... | ௨௰ |
| ராம-சா-கறுப்பன்செட்டியாரவர்கள் | ... | ௰ |
| முத்துக-அமா-அண்ணுமலைசெட்டியாரவர்கள் | ... | ௰ |
| வெ-மு-ரா-ம-நாச்சியப்பசெட்டியாரவர்கள் | ... | ௰௫ |
| வெ-ரா-ம-வெங்கடாசலஞ்செட்டியாரவர்கள் | ... | ௰௫ |
| அ-ரு-லெ-சிதம்பரஞ்செட்டியாரவர்கள் | ... | ௨௰ |
| பி-கு-வயிரவன்செட்டியாரவர்கள் ... | ... | ௰ |
| ஆ-வி-க-பழனியப்பசெட்டியாரவர்கள் | ... | ௰ |
| சூ-மெ-உடையப்பசெட்டியாரவர்கள் | ... | ௰ |
| ரா-ம-அ-நா-நாச்சியப்பசெட்டியாரவர்கள் | ... | ௰ |
| சி-நமசிவாயமுதலியாரவர்கள் ... | ... | ௱ |
| ச-தம்பையாமுதலியாரவர்கள் ... | ... | ௩௰ |
| ஷை பெரியநாயகமுதலியாரவர்கள் ... | ... | ௫௰ |
| சி-மயிலுப்பிள்ளையவர்கள் ... | ... | ௨௰ |
| ரா-ம-ப-அ-முத்தப்பசெட்டியாரவர்கள் | ... | ௰ |
| ரா-ம-ப-சு-சிவராமன்செட்டியாரவர்கள் | ... | ௰ |
| ரா-ம-அருராம-கலுங்கப்பசெட்டியாரவர்கள் | ... | ௰௫ |
| மு-ரா-ம-பெரியகறுப்பன்செட்டியாரவர்கள் | ... | ௰ |
| அ-ந-அ-மு-சபாபதிசெட்டியாரவர்கள் | ... | ௰ |
| கயத்தனந்தப்பாஅவர்கள் ... | ... | ௰ |
| இளவரசனேந்தல் முதற்பாகந்துரையவர்கள் | ... | ௰ |
| புதுக்கோட்டையிற்கல்லாகோட்டைத்துரையவர்கள் | | ௨௰ |

ரூபாய்.

## திருநெல்வேலி.

| | |
|---|---|
| பாட்டப்பற்றுக்கணக்கு நமசிவாயம்பிள்ளையவர்கள் | ள |
| தி-ச-சண்முகம்பிள்ளையவர்கள் ... ... | ள |
| தி-ச-சீதாராமபிள்ளையவர்கள் ... ... ... | ள |
| கு - சிவராமமுதலியாரவர்கள் ... ... | ள |
| சருவையாபீசு வெங்கிடாசலமுதலியாரவர்கள் ... | ள |
| இஞ்சினீராபீசு தாயுமானபிள்ளையவர்கள் ... | ள |
| உலகப்பிரகாசம்பிள்ளையவர்கள் ... ... | ள |
| தி-ரு-கா-வே-சிவசுப்பிரமணியபிள்ளையவர்கள் ... | ள |
| கல்லூர் கோபாலபிள்ளையவர்கள் ... ... | ள |
| கவிராஜ-நெல்லைப்பபிள்ளையவர்கள் ... ... | கூ௩ |



# தெய்வமே துணை.

